உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# பதிப்புரை

சிவஞானபோதம் சித்தாந்த சாத்திரங்கள் பதினான்கனுள் முதனூலாகத் திகழ்வது. இதற்குப் பலரியற்றிய உரை நூல்களுள் சிவஞான சுவாமிகளியற்றிய பாடியம் எனும் இப்பேருரையே மிகச் சிறந்தது. இதை நமது சமாஜம் வெளியிட வேண்டுமென்று பல பேரறிஞர்கள் விரும்பினார்கள். அவ்விருப்பத்துக் கிணங்க இந்நூல் வெளியிடப்படுகின்றது. இந்நூல் மிகச் செம்மையாகவும் திருத்தமாகவும் வெளி வருதற்குப் பல வழிகளிலும் துணை புரிந்தவர்கள் திரு. வி. உலகநாத முதலியாரவர்களும், திரு. மா. துரைசாமி முதலியாரவர்களுமே யாவர். இவர்களுள் முற்கூறிய சாது அச்சுக்கூட உரிமையாளர் இதைச் சமாஜ வெளியீடாக உதவுதற்கு அன்புகூர்ந்து ஒப்புக் கொண்டனர். இவ்விரு பெரியார் கட்கும் நமது சமாஜம் மனமார்ந்த நன்றி செலுத்துகின்றது. இந்நூல் சைவ நன்மக்கட்குச் சிவனடியே சிந்திக்கும் திருப்பெருகு சிவஞானம் முதலிய எல்லா நலங்களையும் அளிப்பதாக.

இங்ஙனம் :

ம. பாலசுப்பிரமணியன்,
காரியதரிசி,
சைவ சித்தாந்த மகா சமாஜம்

# அணிந்துரை



உலகு உயிர் கடவுள் என்னும் மூன்றும் என்றும் இருப்பன. உலகு மாறுதலுடையும் உள்பொருள். உயிர் அறியாமை விரவிய அறிவாகிய உள்பொருள். கடவுள் அறியாமையே இல்லாத முற்றறிவுடைய உள்பொருள். இம் மூன்றனுள், கடவுள் கட்டில்லாத முற்றறி வுடையதாகலின், அஃது அங்கு இங்கு எனுதபடி எங்கும் நீக்கமற நிறைந்தும் எல்லாவற்றையுங் கடந்தும் நிற்கும் தன்மையுடையது. எங்குமுள்ள கடவுளை விடுத்து உலகும் உயிரும் பிரிந்து தனித்து நிற்பதில்லை. இரண்டும் கடவுளின் அகண்டத்தில் கலந்தே நிற்கும்.

உயிருக்கு உலகும் கடவுளும் வேண்டும். கடவுளுக்கு உலகும் உயிரும் வேண்டும். உலகும் உயிரும் இல்லையேல் கடவுளும் வேண்டுவதில்லை. உலகைக்கொண்டே கடவுள் உயிருக்கு நலன் செய்து உயிரைத் தன்னைப்போலாக்குதல் வேண்டும். முப்பொருளும் இவ்வாறு ஒன்றுக்கொன்று இன்றியமையாதனவா யிருத்தல் கருதற்பாலது.

பண்டைநாளில் வாழ்ந்த மக்கள் முதலில் உலகுண்மையையும், பின்னே உயிருண்மையையும், அதற்குப் பின்னே கடவுளுண்மையையும் படிப்படியாகக் கண்டிருப்பார்கள். இம் முப்பொருளுள் எங்குமுள்ள கடவுள், உலகு உயிரில் கலந்து நிற்றலை அவர்கள் நாளடைவில் உணர்ந்திருப்பார்கள். இக் கலப்பே பின்னைநாளில் அத்துவிதம் என்று சொல்லப் பட்டது.

முப்பொருளைப் பற்றியும் அத்துவிதத்தைப் பற்றியும் ஆராய்ச்சி முதிர முதிரப் பலதிறக் கருத்து வேற்றுமைகள் தோன்றின. அவைகளிற் பல, நூல்களாகி உலவுகின்றன. அந் நூல்களால் சில சமயம் நலனும், சில சமயம் தீங்கும் விளை

கின்றன. காய்தல் உவத்தல் அகற்றி நடுநின்று உண்மை காணும் நோக்குடன் நூலாராய்ச்சி செய்வோர்க்கு நற்பயன் விளையும்; மற்றவர்க்குத் தீப்பயன் விளையும்.

தத்துவ விதை முதல் முதல் நமது நாட்டில் விதைக்கப் பட்டது. இவ்வுண்மை சரித்திரக் கண்ணர்க்கு நன்கு விளங் கும். மிகமிகப் பழைய காலத்தில் - அதாவது சரித்திரக் காலத்துக்குப் பல்லாயிரமாண்டுகளுக்கு முன்னர் - நமது நாடு நாவலந்தீவு என்ற பெயர் பெற்றிருந்தது. அத்தீவில் வாழ்ந்த மக்களில் ஆத்ம சக்தி (Occult Power) பெற்றவர் 'சித்தர்' என்று அழைக்கப்பட்டனர். அவர் கண்ட முடிபே சித்தாந்த மென்பது. இது குறித்துச் " சித்த மார்க்கம் " என்னும் நூலில் சிறிது விரித்துக் கூறியுள்ளேன்.

சித்தமார்க்கமாகிய சித்தாந்தம் ஒருபோது உலக முழு வதும் பரவியிருந்தது. இந்நாளில் உலகிடை நிலவும் சமயங் கள் யாவும் சித்தாந்தத்தின் சிதைவுகளேயாம். சிதைவுகள் ஒவ்வோரிடத்தில் ஒவ்வொருவிதப் பெயர் தாங்கி நிற்கின்றன.

சித்தாந்தம், இடைநாளில் தான் பிறந்த நாட்டிலேயே வடக்குப் பகுதியில் "வேதாந்த"மென்றும், தெற்குப் பகுதி யில் " சித்தாந்த " மென்றும் வழங்கலாயிற்று. பின்னே இரண்டும் வெவ்வேறாகக் கருதப்பட்டன. வேற்றுமையுணர் வால் வாதப்போர்களும் நிகழ்ந்தன.

நமது நாட்டு மொழிகளுள் தொன்மை வாய்ந்தன இரண்டு. ஒன்று வடமொழி; இன்னொன்று தென்மொழி. முன்னையதிலுள்ள நூல்களில் பழமையது வேதம். பின் னையதிலுள்ள நூல்களில் பழமையது தொல்காப்பியம். பழைய இருக்கில் இயற்கைக் கூறுபாடுகளும், உயிர் வளர்ச் சியும், கடவுளியல்பும் பேசப்பட்டிருத்தலும், தொல்காப்பி யப் பொருளதிகாரத்தில் இயற்கை நிலக்கூறும் இன்பமும், ஓரறிவுயிர் முதலியனவும், கந்தழிக்கடவுள் நிலையும் பேசப்பட் டிருத்தலும் வெள்ளிடைமலை.

வடமொழி வேதம் நாளுக்குநாள் பெருகலாயிற்று. அதன்கண் புகுந்துள்ள ஞானப்பகுதியாகிய உபநிடதம் -

அதாவது வேதாந்தம்-மன்பதையையே கவர்ந்தது. வேதாந்தம் கடல்போலப் பெருகிற்று என்றுங்கூறலாம். அக்கடலிற் பலர் படிந்து ஆழங்காண்டல் அரிதாயிற்று. அவ்வருமை போக்க வியாச முனிவர் முயன்றார்; முயன்று வெற்றியும் பெற்றார்.

வியாசமுனிவர் தமது நுண்ணறிவால் வேதாந்தக் கடலைக்கடைந்து வேதாந்த சூத்திரம் என்னும் அமுதை உலகுக்கு உதவினர். வேதாந்த சூத்திரத்துக்குப் 'பிரம சூத்திரம்' என்று வேறொரு பெயருமுண்டு. இச்சூத்திரத்துக்குப் பாடியங்கள் அறிஞரால் வரையப்பட்டன.

பாடியங்கள் தோன்றுதற்கு முன்னர் வேதாந்தம் ஒருமை நோக்குடன் அறிஞரால் கொள்ளப்பட்டு வந்தது. பாடியங்கள் தோன்றிய பின்னர் வேதாந்தத்தின் ஒருமை நோக்கு நாளடைவில் பாழ்படலாயிற்று. சிவாத்துவிதமென்றும், கேவலாத்துவிதமென்றும், விசிஷ்டாத்துவிதமென்றும், துவிதமென்றும், பிற என்றும் வேதாந்த உலகில் கவடுகோடுகள் முளைத்தன; அவைகளின்மீது செடி கொடிகளும் தூறுகளும் படர்ந்தன.

பாடியக்காரர்கள் பெயரால் மடங்களும் சம்பிரதாயங்களும் காணப்பட்டன. அவைகளை யொட்டி வாதப்போர்களும் பிணக்குகளும் வீறிட்டெழுந்தன. மூலத்தின் ஒருமை, மக்களின் உள்ளமாம் அரியாசனத்தினின்றும் இழிந்து வீழ்ந்தது. உரைகளின் பன்மை அங்கே இவர்ந்து ஆட்சி புரியலாயிற்று.

பாடியங்கள் வரைந்த பெரியோர்கள்மீது பழி சுமத்துவது அறியாமை. அவர்கள் கருணை மேலீட்டான் அவ்வக் காலத்துக் கேற்றவாறு பாடியங்கள் வரைந்தார்கள். பாடியங்களை யொட்டிக் காணப்பெற்ற மடங்களும் சம்பிரதாயங்களுமே பழிக்கு உரியனவாம்.

உயர்திணை யுலகம் என்றும் ஒருபெற்றியா யிராது. அதன்கண் கருத்து வேற்றுமை நிகழ்வது இயல்பு. சிற்சில சமயம் மூன்று பொருளில் ஒன்றை விடுத்து மற்றொன்றை

மன்பதை கொள்ளும். அதனால் வாழ்வுங் குலையும். அவ்வந் நேரத்திற் சான்றோர் தோன்றி மன்பதை விடுத்த ஒன்றை வலியுறுத்திச் செல்வர்.

ஒருபோது நமது நாட்டவர் உலகை மறந்து, வாழ்வை வெறுத்துக் கடவுள் பெயராலும், வேதத்தின் பெயராலும் கொலை வேள்வி புரிவதில் கருத்துச் செலுத்தினர். கொலை வேள்வியால் எளிதில் வீடுபேறெய்தலாம் என்னும் உறுதி மக்களிடைப் பசுமரத்தாணிபோல் பாய்ந்து நின்றது. அந் நாளில் புத்தர் பெருமான் தோன்றி, உலகியலின் பெருமையைப் புலப்படுத்திக் கொல்லா அறத்தின் விழுப்பத்தை உயிர்கட்கு அறிவுறுத்தினர். கடவுள் கடவுள் என்று வாயாற்பேசி, வெறிகொண்டு தீச்செயல் புரிந்து வந்த மக்கட்குக் கடவுளுபதேசஞ் செய்யப் புத்தர் பெருமான் முந்தினாரில்லை. அக்காலப் போக்கிற்குக் கடவுளுபதேசம் அநாவசியமென்று புத்தர் பெருமான் கருதினர்போலும் !

காலநிலை நோக்கிக் கடவுளுண்மையை வலியுறுத்தாது புத்தர் பெருமான் சென்றமையால், அவர் வழிவழி வந்த சிலர் அறநெறி நிற்பதிற் கருத்துச் செலுத்தாது, கடவுளுண்மையை மறுப்பதில்மட்டும் கருத்திருத்துவாராயினர். அவர் தம் பிரசாரத்தால் யாண்டும் நாத்திகம் பரவலாயிற்று. அதைக் கடியச் சங்கரர் தோன்றினர். அதை அவர் எவ்வாறு கடிந்தனர் ?

புத்தர் பெயரால் சடத்தின் உண்மைமட்டும் வலியுறுத்தப்படுதலையும், அறிவாகிய கடவுளுண்மை மறுக்கப்படுதலையும் சங்கரர் கண்டார் ; மக்கள் உள்ளத்தில் அறிவாகிய கடவுளுண்மை உலவாது, சடத்தின் உண்மைமட்டும் உலவியதால், மக்கள் மனோ நிலையை மாற்ற வேண்டி, அறிவாகிய கடவுளொன்றே உண்மை யென்றும், அறிவுக்கு வேறாகப் பிற பொருள் இல்லை யென்றும் அறிவுறுத்தப் புகுந்தார் ; அந் நோக்குடன் பாடியமும் வரைந்தார். காலத்துக் கேற்ற தொண்டு சங்கரரால் செய்யப்பட்டது.

அறிவாகிய கடவுள் ஒன்றே என்னும் விழுமிய கருத்தில் உறைந்து நில்லாது, அதற்கு வேறாகப் பிறபொருள்

இல்லை என்பதில் மட்டும் உறைந்து நிற்க மக்கள் தலைப்பட்டார்கள். அதனால் சங்கரர் விவகார நிலையினர்க்கு இன்றியமையாததென்று சொல்லியும் செய்தும் காட்டிய கடவுள் வழிபாட்டுக்கு இடர் நேர்ந்தது. அவ்விடரைப் போக்க இராமாநுஜர் போந்தனர். அவர், ஜகஜ்ஜீவபர உண்மையை நிலைநாட்டி, ஆண்டானடிமைத் திறத்தை வலியுறுத்திக் கடவுள் வழிபாட்டின் அவசியத்தை உலகுக்கு உரைத்தனர். இவ்வெடுத்துக் காட்டுகள், காலத்துக் கேற்றவாறு ஆன்றோர் கருத்து வெளிவருதலை உணர்த்துதல் காண்க.

பாடியக்காரர் உள்ளக்கிடக்கைகளைச் சரித்திரக் கண்கொண்டுநோக்கினால் பிணக்குக்கு இடமே நேராது. மடங்களும் சம்பிரதாயங்களும் அறிவு விளக்கத்துக்குத் தோன்றவில்லை. அவை, பாடியக்காரர் பெயரால் கட்டுப்பாடுகளையும் மூடவழக்கவொழுக்கங்களையும் வளர்க்கவே தோன்றின. கட்டுப்பாடுகளும் மூடவழக்கவொழுக்கங்களும் அறியாமையைப் பெருக்கிப் பிணக்குகளை யோம்பாது வேறு என் செய்யும்? முப்பொருளைப் பற்றியும் அத்துவிதத்தைப் பற்றியும் சொற்போரும் மற்போரும் ஆங்காங்கே நிகழ்ந்தன. உண்மை காணும் நன்முயற்சி எழவில்லை. எங்கணும் குழப்பம் குழப்பமே பெருகிற்று.

பொருளுண்மையைப் பற்றிக் குழப்பம் நிகழும்போதெல்லாம் பெரியோர் தோன்றுதல் மரபு. அம்மரபுப்படி ஒரு பெரியார் தோன்றினர். அவரே மெய்கண்டார் என்பவர்.

மெய்கண்டார் வாயிலாகச் சிவஞானபோதம் வந்தது. சிவஞானபோதத்தின் வழியே சிவஞானசித்தி, சிவப்பிரகாசம் முதலிய நூல்கள் தோன்றின. இந்நூல்களால் குழப்பங்களெல்லாம் இரிந்தோடின. முப்பொருளுண்மையும், அத்துவித உண்மையும், வேதவேதாந்தத்தின் உள்ளமும், வேதாந்த சூத்திரத்தின் உள்ளமும் மன்பதைக்கு நேரிய முறையில் புலனாயின.

சிவஞானபோத வரலாறு நாட்டில் பலவிதமாக வழங்கப்படுகிறது. ஒன்றைப் பற்றிப் பலவிதக் கதைகள் கட்டு

வது நாட்டவர் பழக்கம். கதைகள் தெய்வ உணர்ச்சியை எழுப்பும் என்பது நம்மவர் எண்ணம்போலும். சிவஞான போதத்தைப் பற்றி எழுந்த கதைகள் யாவும், தென்முகத் தெய்வத்தின் ஒரு திருக்கையில் சிவஞானபோதம் இருப்பதைச் சொல்லாமற் போகவில்லை. இவ்வொன்றை எல்லாக் கதைகளும் ஒரே முகமாக அறைகின்றன. இது சிந்திக்கற் பாலதே.

தென்முகத்தெய்வம் உலகிலுள்ள பழம் பெருஞ்சமயங் கட்கெல்லாம் பரமாசாரியராக விளங்குவது. முன்னைநாளில் இவ்வாசாரியருக்கே வந்தனை வழிபாடுகள் நடைபெற்று வந்தன. இவரே தலைமைக் குரவரென்று தியொசாபிகல் சங்கத்தைக் கண்ட பிளவட்ஸ்கி அம்மையாரும் தமது நூல்களில் வலியுறுத்தி யுள்ளார்.

தென்முகத் தெய்வம் சாந்தமயமா யிருப்பது; சொற் பொருள் கடந்த நிலையில் சாந்தம் நிலவுவதை அறிவுறுத்துவது; 'சாந்தம் சாந்தம் சிவம்' என்னும் நுட்பத்தின் அறிகுறியாக விளங்குவது. அத்தெய்வத்தின் ஒரு திருக்கையில் சின்முத்திரையும், மற்றொரு திருக்கையில் சிவஞானபோதமும் திகழ்கின்றன. பெருவிரலும் சுட்டுவிரலும் ஒன்றி மற்ற மூன்று விரல்களும் சேரநிற்றலின் குறி சின்முத்திரையாம்.

சின்முத்திரை முப்பொருளுண்மையைத் தெரிவிப்பது. பெருவிரல் - பதி; சுட்டுவிரல்-பசு; மற்ற மூன்று விரல்கள்-மும்மலமாகிய பாசம். பசு மும்மலங்களினின்றும் நீங்கிப் பதியுடன் சேர்தல் வீடுபேறு என்பது கருத்து. இவைகளின் உள்ளுறை சிவஞானபோதம் என்பது. சின்முத்திரையும் சிவஞானபோதமும் பொருளில் ஒன்றே. இரண்டும் இரண்டு கைகளாகச் சொல்லப்படுவது தத்துவம். பிறவுறுப்புக்களும் தத்துவத்தின்பாற்பட்டனவே. விரிவு ஈண்டைக்கு வேண்டுவதில்லை.

தென்முகத் தெய்வத்தின் திருக்கையில் விளங்கும் சிவஞானபோதம் அருள்நாத மயமாயிருப்பது. நாதம் இருவிதம். ஒன்று மாயா நாதம்; மற்றொன்று அருள் நாதம்.

மாயா நாதம் மாயை வாயிலாகப் பிறப்பது. இஃது எல்லார்க்குங் கேட்கும். அருள்நாதம் மாயா நாட்டங் கடந்தது; சாந்த சமாதி நிலையில் எழுவது ; மெய்யறிஞர்க்கு மட்டும் புலனாவது.

உலகம் நாம ரூபங்களாகப் பரிணமித்திருக்கிறது. நாம ரூபங்கள் பேதபுத்தியை உண்டுபண்ணுவன. நாம ரூபங்கள் உள்ளவரை பேதபுத்தி யிருக்கும். பேதபுத்தி உள்ள மட்டும் நாம ரூபங்கள் தோன்றும். நாம ரூபங்கள் அழிந்தால் எல்லாம் ஒலிமயமாகும். அந்நிலையில் பேதபுத்தி அழியும்.

எல்லாம் ஒலி மயமாகப் புலப்படும் வேளையில் குருநாதன் காட்சியளிப்பன் ; சிவஞானபோதத்தை உபதேசிப்பன். அவ்வுபதேசம் ஒலி மயத்தை ஒளி மயமாகச் செய்து, சாந்தத்தையும் சொல்லொணா மேல்நிலையையுங் கூட்டும். சிவஞானபோத உபதேசம்பெற்ற பெரியோர்வழி வரிவடிவில் பரிணமிப்பது சிவஞானபோத நூல்.

ஒலி வடிவில் மொழிவேற்றுமை கிடையாது. ஒலி, வரி வடிவம் பெறும்போது வேற்றுமையுணர்வு தோன்றுகிறது. நாம ரூபத்தில் வேற்றுமை விளைதல் இயல்பு. வேற்றுமையுணர்வை யொழிக்கவே மக்கள் முயலல் வேண்டும். சிவஞானபோதம் வேற்றுமையுணர்வை ஒழிக்கவல்லது.

மெய்கண்டார் தமிழர். அவர் குருநாதன் வாயிலாகப் பெற்ற சிவஞானபோத உபதேசம், அவர் வழியாகத் தமிழ்ச் சிவஞானபோத நூலாகத் திரண்டது. சுருங்கச் சொல்லி விளங்க வைப்பது தமிழுக்குரிய சிறப்பியல்பு. தமிழ்ச் சிவஞானபோதம் மிகச் சுருங்கிய நூல் ; பன்னிரண்டு சிறு சிறு சூத்திரங்களால் ஆக்கப்பட்டது. சிறு நூல் பெரிய உலகையும், எண்ணிறந்த உயிரையும், எல்லையற்ற இறையையும் காட்டுதல் வியப்பன்றோ ? சிவஞானபோதம் சுருங்கிய சொல்லும் பெருகிய பொருளும் உடையது. சிவஞானபோதச் சொல் ஆலின் விதைபோன்றது ; அதன் பொருள் மரம் போன்றது.

சிவஞானபோதத்துக்கு உரை பல உண்டு. அவைகளுள் சிறந்தது சிவஞான சுவாமிகள் உரை. சிவஞான சுவாமிகள் இருவித உரை இயற்றியுள்ளார். ஒன்று சிற்றுரை; வேறொன்று பேருரை. பேருரை, சிவஞானபாடியமென்றும் திராவிடமாபாடியமென்றும் வழங்கப்படுகிறது. சிவஞான சுவாமிகள் உரை, சிவாக்கிர யோகியாரது வடமொழி யுரையை ஒருபுடைத் தழுவியது.

மெய்கண்டார் அருளிய சிவஞான போதத்தின் அகத்தைத் திறந்துகாட்டவல்ல திறவு சிவஞானமுனிவர் உரையே என்று கூறலாம். இவ்வுண்மை, மூலத்தையும உரையையும் ஒருங்குவைத்து ஆராய்வோர்க்கு நன்குபுலனாகும். சிவஞான முனிவர் நுண்ணுடல்கொண்டு மெய்கண்டாருடன் பேசிப் பேசி உரைவரைந்தனரோ என்று நினைக்குமாறு அவர்தம் உரை அமைந்திருக்கிறது.

சிவஞான முனிவர் வடமொழிக்கடலையும் தென்மொழிக் கடலையும் உண்ட பெருங் கொண்டல். அக்கொண்டல் பொழிந்த மழையின் தேக்கம் சிவஞான பாடியம். சிவஞான முனிவரது தத்துவ ஆராய்ச்சி நுட்பத்தை நோக்கும்போது நீலகண்டரும் சங்கரரும் இராமாநுஜரும் மத்துவரும் ஒருருக்கொண்டு சிவஞான முனிவராக வந்தனரோ என்றும், அவர் தம் தமிழ்நடையை நோக்கும்போது நக்கீரரும் இளம்பூரணரும் பரிமேலழகரும் நச்சினார்க்கினியரும் ஒருருக்கொண்டு அவராகப் போந்தனரோ என்றும் அறிஞர் கருதற்கு இடன் உண்டாகிறது.

சிவஞான முனிவரை அறிவுப்பிண்டம் என்று கூறல் மிகையாகாது. கலைகளெல்லாம் சிவஞானமுனிவராகத் தோன்றின போலும். தருக்கமும், வியாகரணமும், இலக்கியமும், இலக்கணமும் தமிழ்ச் சிவஞான முனிவருக்குப் பணியாட்களாகித் துணைபுரியத் தவங்கிடந்தனவோ என்னவோ தெரியவில்லை.

சிவஞான போதத்துக்குச் சிவஞான முனிவர் உரை, நிலனாய் நீராய்க் காற்றாய் ஒளியாய்த் துணைசெய்து வரு

கிறது. சிவஞானபோதத்தைத் தழுவி, முப்பொருளுண்மையையும், அத்துவிதத்தின் சிறப்பையும், பிற நுட்பங்களையும் சிவஞான முனிவர் விளக்கித் தெளிவுசெய்துள்ள பெற்றியை எச்சொல்லால் சொல்வது ? எவ்வெழுத்தால் எழுதுவது ?

சிவஞானமுனிவர் கருத்துக்கள் பல, தற்கால விஞ்ஞான கலைக்கு அரண் செய்வனவாகத் திகழ்கின்றன. இனிவரும் தத்துவ உலகில் சிவஞான முனிவர் பாடியம் அரசு வீற்றிருக்குமென்பதில் ஐயமில்லை. தற்காலச் சைவ உலகம் சிவஞான சுவாமிகளது பெருமையை உணராது கிடப்பது வருந்தத்தக்கது.

'உள்ளது போகாது இல்லது வாராது' என்பது பழமொழி. இது சத்காரியவாதம் எனப்படும். சித்தாந்தம் சத்காரிய வாதத்தை அடிப்படையாகக் கொண்டது. சத்காரிய வாதத்தின் வழிநின்று சிவஞான சுவாமிகள் சிவஞான போதத்துக்கு உரை கண்டுள்ள மாண்பு போற்றற்குரியது.

கண்கூடாக விளங்கும் உலகு மாயாகாரியமானது. மாயா காரியமாகிய உலகு நாமரூபங்களை உடைமையான், அது சுட்டியுணரப்படுவதாகிறது. சுட்டியுணரப்படும் ஒன்று என்றும் ஒரு தன்மையதாயிராது. அஃது அழிதன்மாலையதே. அழிவு எதற்கு ? நாமரூபத்துக்கா ? மூலத்துக்கா ? அழிவு நாமரூபத்துக்கே உண்டு என்றும், மூலத்துக்கு இல்லையென்றும் விஞ்ஞானகலைகூறும். ஆகவே நாமரூபங்கள், உள்பொருளாய மாயையினின்றும் தோன்றி, அம்மாயையிலேயே ஒடுங்குந் தன்மையன என்க. இம்முறையில் உலகு மாறுதலடையும் உள்பொருளென்பதைச் சிவஞான முனிவர் திறம்படச் சிவஞானபோத வாயிலாக விளக்கஞ் செய்கிறார்.

அறிவு ஒன்றே உள்பொருள் என்று கூறுவோர் மாயைக்குத் தனி இருப்புக்கூறுவதில்லை. மாயைக்குத் தனி இருப்புக் கூறின், இருபொருளுண்மைக்கு இடந்தருவதாகும் என்பது அன்னார் எண்ணம்போலும்! அவர், மாயை அறிவின்சாயலாகக் காணப்படும் பொய்த்தோற்றமுடைய ஒன்று என்றும், அஃது உள்பொருள் அன்று என்றும், அநிர்வசனீயம் என்றுஞ் சொல்

வர். மாயை சடம் (Matter); அறிவில்லாதது. அறிவில்லா ஒன்று அறிவாகிய ஒன்றினின்றும் எங்ஙனந் தோன்றும்? இதைக் கடா விடைகளான் சிவஞான முனிவர் தெளிவு செய் துள்ளதை ஆராய்ந்து பார்க்க.

உயிர் தனித்த பொருளா அல்லது பூதங்களின் கூட்டுறவால் பிறப்பதா என்னும் ஆராய்ச்சியும் உலகில் நிகழ்ந்து வருகிறது. உயிர் - சடமும் அல்லாததாய், முற்றறிவாகிய கடவுளும் அல்லாததாய், சடத்துடன் சேரும்போது சடம்போலவும், கடவுளுடன் சேரும்போது கடவுள் போலவும் நின்று, சார்ந்ததன் வண்ணமாயிருப்பது என்று சிவஞானபோதம் செப்புகிறது. இவ்வுண்மையைச் சிவஞான முனிவர் தருக்க முறையால் நன்கு நிறுவிக் காட்டியுள்ளார்.

மஞ்சளும் சுண்ணமும் சேர்ந்ததும் சிவப்புநிறம் தோன்றுவதுபோலப் பூதங்களின் சேர்க்கையால் உயிர் தோன்றுகிறது என்று பூதவாதிகள் கூறுவதுண்டு. அவர் கூற்றைச் சிவஞானமுனிவர் உடைத்தெறிகிறார். மஞ்சளும் சுண்ணமும் சேரும்போது சிவப்பு நிறம் பிறத்தல் உண்மை. சிவப்பு நிறம் யாண்டிருந்து பிறக்கிறது? உள்ள ஒன்றினின்றும் பிறக்கிறதா? இல்லாத ஒன்றினின்றும் புதிதாகப் பிறக்கிறதா? எதுவும் உள்ள ஒன்றினின்றும் பிறப்பது இயற்கை. சிவப்பு நிறம் மஞ்சளிடத்தில் கரந்திருந்தது. அது சுண்ணத்தின் கூட்டுறவு பெற்றதும் சிவப்பாக வெளியாயிற்று. இவ்வாறு பூதங்களினின்றும் உயிர் தோன்றியதெனில், அஃது எப் பூதத்தில் ஒடுங்கியிருந்து தோன்றியது என்னுங்கேள்வி எழுமன்றோ? மஞ்சள் சடம்; அதனின்றும் வெளியான சிவப்பும் சடம். சடத்தினின்றும் சடம் பிறத்தல் இயல்பு. பூதம் சடம்; உயிர் சித் (அறிவு). சடத்தினின்றும் சித் எங்ஙனம் பிறக்கும்? நெல் கமுகாக நீள்வதுண்டோ? இவ்வாறு சிவஞானமுனிவர் தாங்கண்ட உண்மையை விளக்கியிருத்தல் உன்னற்பாலது.

ஒருவன் உயிரை ஆராயப் புகுந்தான். அவன், உயிர் என்பது தோலா நரம்பா எலும்பா மூளையா மனமா கரணமா எது என்று ஆராய்ந்து ஆராய்ந்து ஒன்றுமில்லை என்ற முடி

வுக்குவந்தான் பாவம்! அவன் கூற்றைச் சிவஞானமுனிவர்—ஒரூருக்குச் சென்ற நூற்றுவர், ஊர் சேர்ந்ததும் எல்லாரும் வந்தனரா என்று தெரிந்துகொள்ள ஒருவன் நூற்றுவரையும் எண்ணப்புகுந்து, அவன் தன்னை விடுத்து எண்ணி எண்ணி ஒருவனைக் காணோமே என்று வருந்திய சமயத்தில், ஓர் அறிஞர் 'எண்ணிய உன்னையுஞ் சேர்த்து எண்ணிப் பார்க்க' என்று கூறியதும், நண்பரை எண்ணியவன் நாணுற்றான் என்னும் ஒரு சிறு கதையை எடுத்துக் காட்டி, உயிரை ஆராயப் புகுந்தவனுக்கு நல்லறிவுச் சுடர் கொளுத்துகிறார். உயிர், தோலா நரம்பா பிறவா என்று ஆராயப் புகுந்தவனை, அவன் தன் ஆராய்ச்சிக்குக் கருவியாக நின்று துணைசெய்யும் ஒன்று எது என்று சிந்தித்துப் பார்க்குமாறு முனிவர் அவனை நோக்கி அறை கூவுகிறார்.

உயிர் பேரறிவின் கூறேயன்றித் தனித்த ஒன்றன்று என்று வாதிப்போரும் உளர். உயிர் பேரறிவின் கூறாயின், அதற்கு இடையில் அஞ்ஞானம் எங்கிருந்து வந்தது என்னுங் கேள்வி பிறவாமற்போகாது. இதற்கு, 'அஞ்ஞானம் பொருளாயிருந்தாலன்றோ அதற்குப் பற்றல் பற்றாமை கூறலாம். அது பொருளன்றே' என்னும் விடை அளிக்கப்படுகிறது. அஞ்ஞானமில்லையெனில் உயிரெல்லாம் ஞானமயமாக வல்லவோ இருத்தல்வேண்டும்? விடுதலைக்குரிய முயற்சி எற்றுக்கு? அஞ்ஞானம் உள்பொருளன்று என்று கூறுவோரும் விடுதலைக்கு முயற்சிசெய்யாமலா இருக்கிறார்? இல்லை. மேலும் விவகாரத்தில் அஞ்ஞானம் உண்டு என்றும், பாரமார்த்திகத்தில் அஃது இல்லை என்றும் சொல்லப்படுகின்றன. பொய்யான-அதாவது இல்லாத-அஞ்ஞானம் விவகாரத்தில் மட்டும் எங்கிருந்து எப்படி நுழைந்தது? ஆகவே, உயிர் அஞ்ஞானமுடையதென்பதையும், அஞ்ஞானமில்லாதது முற்றறிவாகிய இறையொன்றே என்பதையும் சிவஞான முனிவர் விளக்கி யிருத்தல் காண்க.

கடவுள் என்பது அறியாமை இல்லாதது; முற்றறிவாயிருப்பது; உலகு உயிர்களில் நீக்கமற நிறைந்திருப்பது; அவைகளைக் கடந்தும் நிற்பது; போக்கு வரவில்லாதிருப்

பது; எல்லாம் ஒடுங்குதற்கும் தோன்றுதற்கும் நிலைக் களனு யிருப்பது. இன்னோன்ன கடவுளியல்புகளை விளக்கி, அக்கடவுளொன்றே மகா சங்காரத்துக்குரியதென்று சிவ ஞான சுவாமிகள் வேத வேதாந்தக் கலைகளைக்கொண்டும், யுக்தியைக்கொண்டும், அநுபவத்தைக் கொண்டும் நிறுவி யிருத்தலை ஆய்ந்து உண்மை உணர்க.

படைப்பைப்பற்றிப் பலர் பலவாறு கூறுப. கடவுள் எல்லாம் வல்லவராகலின், அவர் வெறும் பாழினின்றும் உலகாதிகளைப் படைக்கிறுர் என்று கூறுவோருமுளர். சிவ ஞானபோதம் கூறும் படைப்பு, தருக்க முறைக்கு மிகப் பொருந்தியதா யிருக்கிறது. சிவஞான முனிவர் அதைத் தழுவிப் பலவழியிலும் அணிசெய் துள்ளார்.

இவ்வுலகில் ஒளியும் இருளும் உண்டு; நினைப்பும் மறப் பும் உண்டு; அறிவும் அறியாமையும் உண்டு; இன்பும் துன் பும் உண்டு. இங்கே முழு ஒளியோ இருளோ - நினைப்போ மறப்போ-அறிவோ அறியாமையோ-இன்போ துன்போ - இல்லை; ஒளியும் இருளும் பிறவும் விரவியேயிருக்கின்றன; விரவியிருக்கும் நிலைகொண்டு, முழு ஒளி இருள் - நினைப்பு மறப்பு-அறிவு அறியாமை-இன்பு துன்பு-உடைய ஒரு நிலை யுண்மையை அறிவால் அளந்து ஊகித்து உணரலாம். உயிர், முழு ஒளி-நினைப்பு-அறிவு-இன்பு-உள்ள இடத்தினின்றும் ஈண்டுப் போந்திருக்குமா அல்லது முழு இருள்-மறப்பு-அறி யாமை-துன்பு-உள்ள இடத்தினின்றும் ஈண்டுப் போந்திருக் குமா என்பது ஆராயற்பாலது. வெயிலிலுள்ள ஒருவன் நிழலை நாடுதல் இயல்பு. ஆதலால் உயிர், முழு ஒளி-நினைப்பு-அறிவு- இன்பு-உள்ள இடத்தினின்றும் ஈண்டுப் போந்திராது. அது, முழு இருள்-மறப்பு - அறியாமை - துன்பு - சூழ்ந்த இடத்தி னின்றுமே ஈண்டுப் போந்திருத்தல் வேண்டும். "காரிட்ட ஆணவக் கருவறையில் அறிவற்ற கண்ணிலாக் குழவி யைப் போல் கட்டுண் டிருந்தஎமை வெளியில்விட் டல்லலாங் காப் பிட் டதற்கி சைந்த - பேரிட்டு மெய்யென்று பேசுபாழ்ம் பொய்யுடல் பெலக்கவினை யமுத மூட்டிப் பெரியபுவ னத்தி னிடை போக்குவர வுறுகின்ற பெரியவிளை யாட்ட மைத்திட்-

டேரிட்ட தன்சுருதி மொழிதப்பில் நமனைவிட் டிடரற
ஒறுக்கி இடர்தீர்த் திரவுபக வில்லாத பேரின்ப வீட்டினில்
இசைந்து துயில் கொள்மின் என்று-சீரிட்ட உலகன்னை வடி
வான எந்தையே சித்தாந்த முத்தி முதலே சிரகிரி விளங்க
வரு தக்ஷிணா மூர்த்தியே சின்மயா னந்த குருவே'' என
வருஉந் தாயுமானார் திருவாக்கை நோக்குக.

முழு இருளில் மூழ்கியுள்ள உயிர் அவ்விருளினின்றும் வெளிவர இயலாததா யிருக்கிறது. அதன் கட்டை யவிழ்க்க இறைவன் திருவருள் சுரக்கிறான். இறைவன் முற்றறிவுடையவனாதலின், அவன்பால் இரக்கம் இயல்பாகவே அமைந் திருக்கிறது. அழுக்காறெழும்போது இரக்கம் ஒடுங்குதலையும், அழுக்காறொடுங்கும்போது இரக்கம் எழுதலையும் அநுபவத்தால் உணர்கிறோம். அழுக்காறு, வன்கண் முதலியன அறியாமைக் கூறுகள். இரக்கம், ஒப்புரவு முதலியன அறிவுக்கூறுகள். இறைவன் முற்றறிவுடையவனாயிருத்தலின், அவன்மாட்டு இரக்கம் இயல்பாகவே அமைந்திருத்தலை விளக்க வேண்டுவதில்லை. நீரில் தண்மை யிருப்பதுபோலவும், நெருப்பில் வெம்மையிருப்பதுபோலவும் இறைவனிடத்தில் இரக்கம் இயல்பாயிருக்கிறது. இரக்கத்தின் தன்மை என்னை? துன்பங்கண்ட இடத்தில் அஃது எழுந்து துன்பத்தைப் போக்க முயல்வது அதன் தன்மை. உயிர், தன்னிலை யறியாது இருளில் மூழ்கிக் கிடக்கிறது. அதைக் காணும் இறைவனது இரக்கம் வாளாகிடக்குமோ? அவ்விரக்கம் உயிரைத் துன்பத்தினின்றும் விடுதலைசெய்ய முனைகிறது. இறைவன் இரக்கத்தால் உயிரின் கட்டை யவிழ்த்து, அதைத் தன்னைப் போலாக்கத் திருவுளங் கொள்கிறான். இறைவன் உயிரின் கட்டைப் படிப்படியாக அவிழ்க்க அதற்குப் பலதிற மாயா உடலம் அளிக்கிறான். உயிர் மாயா உடலம் பெற்றதும் சிறிது அறிவு விளங்கப் பெறுகிறது. மாயை உயிரின் அறியாமையை நீக்குதற்குரிய கருவி. 'மாயா தனு விளக்கு' என்று சிவஞானசித்தி கூறுதல் காண்க.

தனு கரண புவன போகங்களெல்லாம் மாயையின் காரியப்பாடேயாம். மாயா காரியமாகிய தனு கரண புவன போகங்

களை உயிருடன் இறைவன் சேர்ப்பதே படைப்பு என்பது. இப்படைப்பில் புதுமை ஒன்றுமில்லை. உயிரும் உள்ளது; மாயையும் உள்ளது; கடவுளும் உள்ளது. உயிர் அறியாமைக் கட்டிலிருப்பதால் அது தானே மாயையுடன் சேர்வதில்லை. மாயை சடமாதலின் அதுவும் தானே உயிருடன் புணர்வதில்லை. இரண்டையும் சேர்க்க ஒரு பொருள் வேண்டப்படுகிறது. அஃது உயிரைப்போல அறியாமைக்கட்டில்லாததாய், மாயையைப்போலச் சடமல்லாததாய், முற்றறிவுடையதாயிருத்தல்வேண்டும். இவ்வியல்புடைய ஒன்றே கடவுள் என்பது. உள்ள ஒன்றுடன் உள்ள ஒன்றைச் சேர்ப்பதே கடவுள் புரியும் படைப்புத்தொழிலென்க. இந்நுட்பத்தைச் சிவஞான முனிவர் விளக்கியுள்ள திறம் பாடியத்தில் திகழ்கிறது.

உயிர் தொடக்கத்தில் புல் கொடி செடி மரம் முதலிய உடலங்களைப் பெற்றும், பின்னை புழு மீன் ஆமை பறவை விலங்கு முதலிய உடலங்களைப் பெற்றும், இறுதியில் மக்கள் உடலைப் பெறுகிறது. மக்கட் பிறவியில் உயிர்க்குப் பகுத்தறிவு முகிழ்க்கிறது. பகுத்தறிவின் இயல்பு பிறவுயிர்களைத் தன்னைப்போல் கருதுவது. இவ்வியல்பை மேலும் மேலும் பெருக்க உயிர் முயலுதல் வேண்டும். இம்முயற்சியில் தலைப்படாத உயிர் தெய்வநிலையடையாது.

பகுத்தறிவு விளங்கியதும் உயிர், தன்னை இந்நிலைக்குக் கொணர்ந்த இறைவனிடம் நன்றியறிதலுடையதாய், அவனை நினைந்து நினைந்து உருகும் பயிற்சியில் நிலைத்து நிற்றல் வேண்டும். உருகும் உள்ளம் இறைவனுக்குக் கோயிலாதல் ஒருதலை. பகுத்தறிவுடைய மக்களுக்கு இறை வழிபாடு இன்றியமையாது வேண்டற்பாலது. "குனித்த புருவமும் கொவ்வைச்செவ் வாயிற் குமிண்சிரிப்பும் - பனித்த சடையும் பவளம்போல் மேனியிற் பால்வெண்ணீறும் - இனித்த முடைய எடுத்தபொற் பாதமுங் காணப்பெற்றால் - மனித்தப் பிறவியும் வேண்டுவ தேயிந்த மாநிலத்தே" என்று அப்பர் அருளியிருத்தலை யோர்க. இறைவனது நன்றியை மறந்து, அவனை நினையாது வாழும் உயிரைத் தீவினை சூழ்ந்து

உறுத்தும். அதனால் பிறவி வளரும். பிறவியில்லாக் கடவுளை உன்ன உன்னப் பிறவிவேர் அறும்.

கூர்தல் அல்லது உள்ளது சிறத்தல் (Evolution) என்னும் நியாயம் பற்றி ஹெக்கல், டார்வின், கித் முதலியோர் கூறியுள்ள உயிர் வளர்ச்சி, சிவஞானபோத உரைக்கண்ணும் ஒளிர்தல் கவனிக்கற்பாலது. உயிர், புழு மீன் ஆமை பன்றி குரங்கு முதலிய உடலங்களைத் தாங்கிப் பின்னை மனித உடல் தாங்குவதென்பது சிவஞானபோதத்துக்கு அரண்செய்யும் உண்மையே யாகும்.

உயிர் சடத்தின் சார்பு கொள்ளக் கொள்ள அதன் அறிவு நன்கு விளங்கும் என்று விஞ்ஞானகலை கூறுகிறது. சிவஞானபோதம் என்ன சொல்கிறது? உயிர் மாயையின் கூட்டுறவு பெறப் பெறப் படிப்படியே அறியாமை நீங்கி அறிவு விளக்கம் பெறுகிறது என்று சொல்கிறது. இரண்டுக்கும் வேற்றுமையுளதோ? சிவஞானபாடியம், இந்நுட்பங்களையெல்லாம் மிகத் தெளிவாக விளக்கிக் காட்டுகிறது.

உலகு-உயிர்-கடவுள்-உண்மை கூறுஞ் சிவஞானபோதம், அம்மூன்றும் தனித்தனியே நிற்கவில்லை என்றும், உலகு உயிருடன் கடவுள் நீக்கமற நிறைந்து நிற்கிறது என்றும் முழங்குகிறது. முப்பொருளுண்மையை மறுத்துப் பொருள் ஒன்றே கூறுவோர், உலகு உயிருடன் கடவுள் நீக்கமற நிறைந்திருத்தல் என்னுங் கூற்றை ஏற்பதில்லை. எங்கும் நிறைந்துள்ள கடவுளில் உலகும் உயிரும் இடம்பெறின், கடவுளுக்குப் பரிபூரண தோஷம் உண்டாகுமென்று அவர் வாதிக்கிறார். அவ்வாதத்தைச் சிவஞான முனிவர் தடைவிடைகளால் வீழ்த்தி, மெய்கண்டார் உள்ளக்கிடக்கையை உறுதிப்படுத்துவது கூர்ந்து சிந்திக்கத்தக்கது.

இரண்டு பொருள் ஓரிடத்தில் இடம்பெறா என்பது உண்மையே. எள்ளுள்ள இடத்தில் கொள்ளிருத்தல் முடியாது; அஃதுள்ள இடத்தில் இஃதிருத்தல்முடியாது. எள்ளுங் கொள்ளும் எல்லையுடைய வடிவப்பொருள். எல்லையுடைய வடிவப் பொருள் ஒன்றுள்ள இடத்தில் மற்றொன்றிருக்க

இடம்பெறுதல் அரிதே. கடவுள் எல்லையுடைய பொருளன்று. அஃது உருவமற்றது; எல்லையற்றது; அகண்டமானது. அதைக் கண்டப் பொருளாக் கருதி, இரண்டு பொருள் ஓரிடத்தில் இடம் பெறு என்னும் நியாயத்தைக் குறிப்பது நியாயமாகுமா? அவயவப் பொருளுக்கேற்பட்ட நியாயத்தை நிர்அவயவப்பொருளுக்கு எடுத்துக் காட்டுதல் தருக்க முறையாகாது.

ஆகாயம் தனித்தும் மற்றப் பூதங்களில் நிறைந்தும் இருப்பது. அது மற்றப் பூதங்களில் பாய்ந்திருப்பது உண்மை. காற்றுள்ள இடத்தில் ஆகாயம் இருக்கிறதா? இல்லையா? இங்கே இரண்டு பொருள் ஓரிடத்தில் இடம் பெறு என்னும் நியாயத்தை எடுத்துக் காட்டுவது அறிவுடைமையாகுங் கொல்! ஆகாயம்போன்றது கடவுள்; மற்ற பூதங்கள் போன்றவை உலகும் உயிரும். இவ்வாறு சிவஞான முனிவர் பாடியத்தில் எடுத்துக் காட்டியுள்ளதைத் தற்கால அறிவியல் நூல் வல்லார் நோக்குவாராக.

உலகு உயிருடன் கடவுள் நீக்கமறக் கலந்துள்ள நிலையையே மெய்கண்டார் அத்துவித மென்கிறார். பொருள் ஒன்றே என்னுங் கொள்கையுடையார், மெய்கண்டார் கருத்தை ஏற்பதில்லை. அத்துவித மென்பதிலுள்ள அகரத்துக்கு அவரவர் கொள்கைக்கு இயைய அவரவர் பொருள் சொல்கிறார். மெய்கண்டார் சார்பினர் அகரத்துக்கு அன்மைப் பொருள் கூறுகிறார்; ஏகான்மவாத சார்பினர் அகரத்துக்கு இன்மைப் பொருள் கூறுகிறார். மறுமை முதலிய வேறு பொருள் கூறுவோருமுளர். அக்கடைகளை ஈண்டுத் திறக்கில் அணிந்துரை பெருகும்.

அகரத்துக்கு அன்மைப் பொருளும் உண்டு; இன்மைப் பொருளும் உண்டு. அமலம் அநேகம் என்னுஞ் சொற்களை எடுத்துக்கொள்வோம். இரண்டிலும் அகரம் இருக்கிறது. அமலம் என்பதற்கு மலமில்லை என்பது பொருள். அநேகம் என்பதற்கு ஒன்றல்ல பல என்பது பொருள். முதலிலுள்ள அகரம் இன்மைப் பொருளையும், இரண்டாவதிலுள்ள

அகரம் அன்மைப் பொருளையும் தருகின்றன. அநேகம் என்பதிலுள்ள அகரத்துக்கு இன்மைப் பொருள் கூறின், அநேகம் என்பது பல என்னும் பொருளிழந்து ஒன்றுமில்லை என்னும் பொருளுடையதாகும். அநேகம் என்பதற்குப் பொருள் ஒன்றுமில்லை என்பதா? பல என்பதா? பல என்று எவருஞ் சொல்வர். இதனால் பெறுவதென்னை? எண்ணுப் பெயருடன்வரும் அகரம் அன்மைப் பொருளையே தருமென்பது பெறுகிறோம். அத்துவிதம் என்பதிலுள்ள அகரம், துவிதம் என்னும் எண்ணுப்பெயரை யொட்டியிருத்தலான், அகரத்துக்கு அன்மைப்பொருள் குறிப்பதே இலக்கண வரம்பும் உலக வழக்குமாகும். சிவஞான முனிவர் வியாகரணங்கொண்டு அத்துவித அகரத்துக்கு அன்மைப் பொருளென்றே உறுதி செய்துள்ளார்.

வேதத்தில் ஒன்றைக்குறிக்க ஏகம் என்னுஞ் சொல்லும், இரண்டைக் குறிக்கத் துவிதம் என்னுஞ் சொல்லும் போந்திருக்கின்றன. சிவனும் சீவனும் ஒன்றாயிருப்பின் ஏகமென்றும், வெவ்வேறாயிருப்பின் துவிதமென்றுஞ் சொல்லுமளவில் வேதம் நின்றிருக்கும். வேதம் அத்துவிதம் என்று விளம்பி யிருக்கிறது. ஆகவே, அத்துவிதத்துக்குப் பொருள் ஏகமென்றோ துவிதமென்றோ கோடல் வேதவிருத்தமாகும். இதையும் சுவாமிகள் பாடியத்தில் தெள்ளத் தெளிய விளக்கியிருக்கிறார்.

'பொருள் ஒன்றே' என்று வேதம் கூறுவதற்குக் கடவுள் ஒன்றே என்று மெய்கண்டார் கொண்ட பொருளைச் சிவஞான முனிவர் தெளிவு செய்துள்ளதை நோக்குழி முனிவரது வடமொழிப் புலமை நன்கு புலனாகும். சிவசூத்திரம் முதலிய பல வடமொழி நூல்களைச் சிவஞான முனிவர் பொருந்திய முறையில் ஆண்டிருத்தல் புலவர்கட்கு விருந்தாகும். சிவஞானபாடியத்தைப் பயில்வோர், வேத வேதாந்தம், ஆகமம், வேதாந்த சூத்திரம், சூத்திர பாடியங்கள் முதலியவற்றைப் பயிலாமலே, அவைகளைப் பயின்ற பயனைப் பெறுவர் என்பது திண்ணம்.

சிவஞானபாடியம் தத்துவ ஆராய்ச்சிக்கு ஒரு கருவூலம் போலத் துணைபுரியும்; தமிழ் பயில்வோர்க்கும் அவ்வாறே துணைசெய்யும். சிவஞானபாடியம் தமிழ்ச் செல்வம்; கற்பகம்; காமதேனு. அது வேண்டுவதை உதவும். இத்துணைச் சிறப்பு வாய்ந்த திராவிடமாபாடியம் ஒவ்வொரு தமிழரிடத்திலும் மிளிர்தல் வேண்டுமன்றோ? தமிழ் வாழ்க; சிவநெறி வாழ்க; சிவஞான முனிவர் சேவடி வாழ்க.

இராயப்பேட்டை
சென்னை
24—3—36

திரு. வி. கலியாணசுந்தரன்

உ

சிவமயம்

# மெய்கண்டார் வரலாறு*

பண்டைமறை வண்டரற்றப் பசுந்தேன் ஞானம்
பரிந்தொழுகச் சிவகந்தம் பரந்து நாறக்
கண்டஇரு தயகமல முகைக ளெல்லாங்
கண்திறப்பக் காசினிமேல் வந்தஅருட் கதிரோன்
விண்டமலர்ப் பொழில்புடைசூழ் வெண்ணெய் மேவு
மெய்கண்ட தேவன்மிகு சைவ நாதன்
புண்டரிக மலர்தாழச் சிரத்தே வாழும்
பொற்பாதம் எப்போதும் போற்றல் செய்வாம்.

—**சிவஞானசித்தியார்**

நடுநாட்டிலே, பெண்ணாகடம் என்ற தலத்திலே, அச்சுதர் களப்பாளர் என்ற சைவ வேளாளர் புத்திரப் பேறின்மையால் வருந்தித் தமது குலகுருவாகிய சகலாகம பண்டிதரிடம் தமது குறையைத் தெரிவிக்க, அவர் தேவாரத்தில் கயிறு சாத்திப் பார்த்துத் திருஞான சம்பந்தர் திருவாய் மலர்ந்தருளிய,

பேயடையா பிரிவெய்தும் பிள்ளையினோ டுள்ளநினை
வாயினவே வரம்பெறுவர் ஐயுறவேண் டாவொன்றும்
வேயனதோ ளுமைபங்கன் வெண்காட்டு முக்குளநீர்
தோய்வினையா ரவர்தம்மைத் தோயாவாந் தீவினையே.

என்ற பாசுரத்தைக் கண்டு மிக மகிழ்ந்து, திருவெண்காட்டுக்குச் சென்று முக்குள நீராடி வழிபாடு செய்யத் தமது சீடர்க்குக் கட்டளையிடுதலும், அச்சுதர்களப்பாளரும் அவ்வண்ணமே சென்று வழிபாடு செய்ய, மனைவியார் கருப்பவதியாகி ஓர் ஆண் பிள்ளையைப் பெற்றெடுத்தனர். குழந்தைக்குச் சுவேதவனப்பெருமாள் என்ற திருநாமம் சூட்டப்பட்டது. இக்குழந்தை பெண்ணாகடத்தில் தந்தையா ரில்லத்திலும், திருவெண்ணெய் நல்லூரில் நல்லம்மான் இல்லத்திலும் அருமையாக வளர்ந்து வந்தது. இக்குழந்தையின் மூன்றாவது ஆண்டிலே திருவெண்ணெய்நல்லூரி லிருக்குந் தருணத்திலே, திருக்கயிலாய பரம்பரையில் அகச் சந்தானத்து நான்காவது குரவராகிய பரஞ்சோதி முனிவர் ஆகாய வீதியாக வந்து, இக்குழந்தை பண்டை நற்றவத்தாற்பெற்ற பரிபக்குவத்தை யறிந்து உபதேசம் செய்து, தமது

*இவ்வரலாறு திரு. ம. பாலசுப்பிரமணிய முதலியாரவர்களால் எழுதப்பெற்றது.

ஆசிரியராகிய சத்திய ஞான தரிசனிகளுடைய (=மெய்கண்டார்) பெயரையே இக்குழந்தைக்கும் தீக்ஷா நாமமாகச் சூட்டிச் சென்றார்.

இவ்வாறு உபதேசம் பெற்ற மெய்கண்டார் பொல்லாப் பிள்ளையார் சந்நிதியிலே நிட்டை செய்து சிவஞானபோதம் என்ற நூலையும் அதற்கு வார்த்திகப் பொழிப்புரையையுஞ் செய்து பல நன்மாணக்கர்க்குபதேசித்துவந்தனர். இவர் உபதேசிப்பதைக் கேள்வியுற்ற இவருடைய குலகுருவாகிய சகலாகம பண்டிதர் இவரிடம் வந்து ஆணவ மலத்தைப் பற்றி வினவ, மெய்கண்டார் இவர் செருக்குற்று நிற்கும் நிலையைச் சொல்லாமற் சொல்ல எண்ணி, இவரை ஒரு முறை ஏற இறங்கப் பார்த்தனர். உடனே சகலாகம பண்டிதர் இதை யறிந்து, மெய்கண்டார் திருவடிகளில் வீழ்ந்துவணங்கித் தமக்குபதேசிக்குமாறு வேண்டினர். மெய்கண்டார் இவருக்குபதேசம் செய்து தமது சிவ ஞானபோதத்துக்கு ஒரு விரிந்த வழிநூல் செய்யுமாறு கட்டளையிட்டனர். இவ்வழி நூலே சிவஞான சித்தியார் ஆகும். மெய்கண்டார் சிறந்த சிவாநுபூதிமானாக விளங்கிச் சகலாகமபண்டிதர் என்ற அருணந்தி சிவாசாரியார், மனவாசகங் கடந்தார் முதலிய நாற்பத்தொன்பது நன்மாணவர்கட்குபதேசம் செய்து ஐப்பசி சுவாதி நன்னாளிலே சிவசாயுச்சிய பதவி யடைந்தனர்.

இவருடைய காலம் கி. பி. பதின்மூன்றாம் நூற்றாண்டின் முற்பகுதியாகும். இதைப் பற்றிய ஆராய்ச்சி, கல்வெட்டு, இவர் இயற்றிய சிவஞானபோதம் முதனூலே வடமொழி நூலின் மொழிபெயர்ப் பல்ல வென்பதைப் பற்றிய ஆராய்ச்சி, சிவஞான பாடியத்தின் சாரம் முதலியவற்றை நமது சமாஜ வெளியீடாகிய "மெய்கண்டாரும் சிவ ஞானபோதமும்" என்ற நூலிற் காண்க.

சிறிய வாடியிற் பெரியமால் வரைப்பொருள் செறிந்தாங்
கறிவு நூல்களின் முடிபெலா மகத்தடக் கியதோர்
நெறியி னீடிய நிகழ்சிவ ஞானபோ தத்தைக்
குறிய தீந்தமி ழாலுரை குரவனைப் பணிவாம்.

மூன்று மலங்கெடுத்து மூலமா மப்பொருளுந்
தோன்ற வருளுந்தன் தொண்டர்க்கிங்—கான்றமைந்தோர்
கைகண்ட தன்றே கடன்ஞாலத் தெப்பொருட்கு
மெய்கண்ட தேவன்விரைத் தாள்.

கண்ணுதலுங் கண்டக் கறையுங் கரந்தருளி
மண்ணிடையின் மாக்கண் மலமகற்றும்—வெண்ணெய்நல்லூர்
மெய்கண்டா னென்றொருகான் மேவுவரேல் வேறின்மை
கைகண்டா ருள்ளத்தின் கண்.



சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# சிவஞான சுவாமிகள் வரலாறு*

தென்பாண்டி நாட்டிலே தண்பொருநை யாற்றின் கரைக் கருகிலே (அம்பா சமுத்திரம் ரயில்வே ஸ்டேஷனுக்கருகிலுள்ள) விக்கிரம சிங்கபுரத்திலே சைவ வேளாளர் குலத்திலே சிறந்த சிவ பக்தராக விளங்கிய ஆநந்தக்கூத்தருக்கும் மயிலம்மையாருக்கும் முக்களாலிங்கர் என்பவர் பிள்ளையாகத் தோன்றிப் பெற்றோர்களால் அருமையாக வளர்க்கப்பட்டு வந்தனர். முக்களாலிங்கர் இளமையி லேயே சிறந்த கல்விமானாக விளங்கினர். திருவாவடுதுறை யாதீனத் துத் துறவிகள் சிலர் தலயாத்திரைசெய்து தமது ஊருக்குவந்த போது அவர்களை வரவேற்று அவர்கட்குத் திருவமுது செய்வித்துத் தமது தாயாரைப் புகழ்ந்து,

"அருந்ததியென் னம்மை அடியவர்கட் கென்றுந்
திருந்த அமுதளிக்கும் செல்வி—பொருந்தவே
ஆநந்தக் கூத்தர் அகமகிழத் தொண்டுசெயும்
மானந்த வாத மயில்."

என்று இவர் பாடியதைக்கேட்ட துறவிகள் முக்களாலிங்கரை ஆசீர் வதித்து அவ்வூரிலுள்ள திருமடத்துக்குச் சென்றனர். முக்களாலிங் கர் தமது பெற்றோர்களிடம் விடைபெற்று அத்துறவிகளுடன் திருவாவடுதுறை சென்று, ஆங்கு சின்னபட்டத்திலிருந்த பின் வேலப்ப தேசிகரிடம் தீக்கையும் சந்நியாசமும் சிவஞானயோகி என்ற தீக்ஷாநாமமும் பெற்று, மெய்கண்டசாத்திரம் முதலிய எல்லா நூல்களையும் ஐயந்திரிபறக்கேட்டுச் சிந்தித்துத் தெளிந்து வட மொழியிலும் தமிழிலுமுள்ள இலக்கிய இலக்கண தருக்க நூல்களை யெல்லாம் பயின்று சிறந்த ஞானாசிரியராக விளங்கினர்.

சிவஞான யோகிகளியற்றிய இலக்கண, இலக்கிய, தருக்க, சாத்திர நூல்கள் மிகப் பல. அவை கீழ் வருவனவாகும்:—

*இவ்வரலாறு திரு. ம. பாலசுப்பிரமணிய முதலியாரவர்களால் எழுதப்பெற்றது.

(1) இளசைப் பதிற்றுப் பத்தந்தாதி (2) கச்சி ஆநந்தருத்திரேசர் பதிகம் (3) கம்பராமாயண முதற்செய்யுட் சங்கோத்தர விருத்தி (4) கலைசைச் செங்கழுநீர் விநாயகர் பிள்ளைத் தமிழ் (5) கலைசைப் பதிற்றுப்பத்தந்தாதி (6) காஞ்சிப்புராண முதற்காண்டம் (7) குளத்தூர் அமுதாம்பிகை பிள்ளைத் தமிழ் (8) குளத்தூர்ப் பதிற்றுப் பத்தந்தாதி (9) செப்பறைப்பதி இராசை அகிலாண்டேசுவரி பதிகம் (10) சோமேசர் முதுமொழி வெண்பா (11) திருத்தொண்டர் திருநாமக்கோவை (12) திருமுல்லைவாயிலந்தாதி (13) திருவேகம்பரந்தாதி (14) திருவேகம்பாரநந்தக் களிப்பு (15) பஞ்சாக்கர தேசிகர் மாலை (இவை இலக்கியம்) (16) இலக்கண விளக்கச் சூறாவளி (17) சங்கர நமச்சிவாயர் நன்னூல் விருத்தியுரைத் திருத்தம் (18) தொல்காப்பியச் சூத்திரவிருத்தி (இவை மூன்றும் இலக்கணம்) (19) தருக்க சங்கிரகமும் அன்னம்பட்டீயமும் (இது தருக்கம்) (20) அரதத்தாசாரியர் சுலோக பஞ்சக மொழிபெயர்ப்பு (21) எடுத்தென்னும் சொல்லுக்கிட்ட வைரக்குப்பாயம் (22) என்னையிப்பவத்தில் என்னுஞ் செய்யுட் சிவசமவாதவுரை மறுப்பு (23) சித்தாந்தப் பிரகாசிகை (24) சித்தாந்த மரபு கண்டன கண்டனம் (25) சிவசமவாதவுரை மறுப்பு (26) சிவஞானசித்திப் பொழிப்புரை (27) சிவஞானபாடியம் (28) சிவஞானபோதச் சிற்றுரை (29) சிவதத்துவ விவேகம் (இவை பத்தும் சமய நூல்கள்). சுவாமிகள், உலகிலெழுந்த வழுவான பல கொள்கைகளை அவ்வப்போது மறுத்துச்சிறந்த உரைநடைநூல்களால் உண்மையை நிலைநாட்டியது தமிழ்நாடும் தமிழ்மொழியும் சைவசமயமும் ஒருங்கே செய்த தவத்தின் பயனேயாகும். சுவாமிகள் போன்ற சிறந்த மறுப்புரையாசிரியரை (Controversialist) எந்நாட்டிலும் காண்பதரிது.

சிவஞான சுவாமிகள் காஞ்சிபுரத்திற்றங்கி சிவஞானபாடியத்தையும் காஞ்சிப் புராணத்தையும் எழுதினொர்களென்றும், சுவாமிகளுடைய புலமை, திறமை, ஒழுக்கம் முதலியவற்றைக் கண்டு திருவாவடுதுறை யாதீனத்திலுள்ள சிலர் அழுக்காறு கொண்டனரென்றும், சுவாமிகள் திருவாவடுதுறையை யகன்று கச்சி, தொட்டிக்கலை, சென்னை முதலிய பல இடங்களிற்றங்கித் தொண்டை நாட்டையே தமது இருப்பிடமாகக் கொண்டு மேற்கூறிய நூல்களியற்றினொர்களென்றும், பின்னொரு காலத்தில் அவ்வாதீனத்தினர் சுவாமிகளை மடாதிபதிகளாக அமரும்படி விண்ணப்பிக்க, சுவாமிகள் தாம் வணங்கப் பிறந்ததாகவும், வணங்கப்படுதற்குப் பிறக்கவில்லை யென்பதாகவும் கூறி மறுத்தார்களென்றும், சுவாமிகட்கு நாக்கு மிகவும் நீண்டிருந்ததால் சுவாமிகள் ஆதிசேடனவதாரமென்று போற்றப்பட்டார்களென்றும், பெரியபுராணத்தை வலக்கண்ணாகவும் பரஞ்சோதி

யார் திருவிளையாடற் புராணத்தை இடக்கண்ணாகவும் தாம் பாராட்டித் தமது படுக்கையிலும் வலது புறத்தில் பெரியபுராணச் சுவடியையும், இடதுபுறத்தில் திருவிளையாடற் சுவடியையும், மார்பில் திருவாசகத்தையும் வைத்துக்கொள்வது சுவாமிகளுடைய பழக்கமென்றும் கர்ணபரம்பரையாகச் சில செய்திகள் கூறப்படுகின்றன. இவைகளை யாராய்ந்து உண்மை காண்பது அறிஞர் கடன். சுவாமிகள் காஞ்சிபுரத்திலிருந்த காலத்தில் அவ்வூர் வைணவர் சிலர் கம்பராமாயணமே சிறந்த தமிழ்க் காவியமென்று செருக்குடன் கூற, அவ்விராமாயணத்திலுள்ள "நாடிய பொருள்கை கூடும்" என்ற காப்புச் செய்யுளிலுள்ள பல குற்றங்களைக் கூறிச் சங்கைசெய்ய அவ்வைணவர்கள் உத்தரங் கூறாது விழிக்க, சுவாமிகளே உத்தரங் கூறி அவர்களை மகிழ்வித்தார்கள். இந்நூல் கம்பராமாயண முதற்செய்யுட் சங்கோத்தர விருத்தி எனப்படுவது. காஞ்சிப் புராணத்தை அரங்கேற்றிய காலத்தில் சில புலவர்கள் கூத்தப்பெருமான் துதி முன்னரும் ஏகாம்பரநாதர் துதி பின்னரும் வைக்கப்பட்டதை ஆக்ஷேபிக்கத் தமது மாணாக்கர் கச்சியப்ப முனிவரை அவர்கட்குப் பதிலளிக்குமாறு சுவாமிகள் பணிக்க, அவர் ஓதுவார் மூர்த்திகளைக் கொண்டு திருவேகம்பத்துத் தேவாரத்தை ஓதும்படி செய்ய, ஓதுவாரும் "திருச்சிற்றம்பலம்" என்று தொடங்குதலும், புலவர்களை விளித்து "இவ்வாறு இத்தலத்தில் தொடங்குதல் பொருந்துமோ, பிருதிவியம்பலம் எனத் தொடங்குதல் வேண்டாவோ" என்று கூறி அப்புலவர்களைத் தலைகுனியும்படி செய்தனரென்ற ஒரு செய்தி கூறப்படுகின்றது. சுவாமிகள் திருப்பாதிரிப்புலியூரிலிருந்த காலத்தில் ஒரு பிரபு ஒரு பொற்கிழியை வைத்து "கரையேற விட்ட முதல்வா வுன்னை யன்றியுமோர் கதியுண்டாமோ" என்பதை ஈற்றடியாகவைத்து ஒரு செய்யுளியற்றுவோர்க் கிப்பொற்கிழி யளிப்பேமென்ன, ஓர் ஏழைப் பிராமணன் இதைச் சுவாமிகளிடம் தெரிவிக்க, சுவாமிகள்,

வரையேற விட்டமுதஞ் சேர்ந்தனிட வுண்டனைவல் வினமென் றூலு
முரையேற விட்டமுத லாகுமோ வெனைச்சித்தென் றுரைக்கி னென்
நரையேற விட்டமுத ளைவனுக் கொண்டுநறும் புலிசை மேவுங் [று
கரையேற விட்டமுதல் வாவுன்னை யன்றியுமோர் கதியுண் டாமோ.

என்ற செய்யுளை எழுதிக்கொடுத்து அந்தப் பிராமணன் பொற்கிழியைப் பெறுமாறு செய்தார்களென்ற ஒரு செய்தியும் கூறப்படுகிறது.

சிவஞான சுவாமிகள் கச்சியப்ப முனிவர், தொட்டிக்கலை சுப்பிரமணிய முனிவர், இலக்கணம் சிதம்பரநாத முனிவர் முதலிய பன்னிரு மாணவர்கட்குபதேசம்செய்து நெடுங்காலம் தமிழ்த்தொண்டும்

சமயத்தொண்டும்புரிந்து சாலிவாகனசகாப்தம் ௧௭௦௮ விசுவாவசு௵ சித்திரை௴ ௮௳ ஞாயிற்றுக்கிழமை (17-4-1785) பகல் $1\frac{3}{4}$ மணிக்கு ஆயிலிய நக்ஷத்திரத்தில் சிவசாயுச்சிய பதவியடைந்தார்கள். சிவஞான சுவாமிகள் தோத்திரப் பாக்களில் சில கீழ்வருமாறு :—

கருணைபொழி திருமுகத்திற் றிருநீற்று நுதலுங்
கண்டாரை வசப்படுத்தக் கனிந்தவா யழகும்
பெருமைதரு அறவோடு பொறையுளத்திற் பொறுத்தே
பின்னுகனூர் மலர்த்தாள்கள் பிரியாத மனமும்
மருவினர்க ளகலாத ஞானமே வடிவாம்
வளர்துறைசைச் சிவஞான மாமுனிவன் மலர்த்தாள்
ஒருபொழுது நீங்காம லெமதுளத்திற் சிரத்தில்
ஓதிடுநா வினிலென்று முன்னிவைத்தே யுரைப்பாம்.

திண்ணவின்பச் சேவடியுந் திருவிழியுந்
திருமார்புஞ் செல்வக் கையு
நண்ணுமன்பர்க் கருள்கருணைத் திருமுகமும்
பசுங்குழவி நடையே யாகிப்
புண்ணியத்தின் பொலிவாகி யற்புதக்கோ
லக்கொழுந்தாய்ப் புலைநா யேற்குக்
கண்ணைவிட்டு நீங்காத சிவஞான
சற்குருவே கருணை வாழ்வே.

ஓதரிய வாய்மைச் சிவாகமங் கட்கெலா
முற்றபே ராகரமதா
யோங்குதிரு வாவடு துறைப்பதியி லற்புதத்
தொருவடிவு கொண்டருளியே
பேதமுறு சமயவா திகளுள மயக்கைப்
பெயர்க்கும்ரச குளிகையாகிப்
பிரியமுட னேவந் தடுத்தவர்க் கின்பப்
பெருங்கருணை மேருவாகி
ஆதரித் தடியேங்க ளுண்ணத் தெவிட்டாத
அமிர்தசா கரமாகியே
அழகுபொலி கலைசைச் சிதம்பரே சுரரடிக்
கதிமதுர கவிதைமாரி

மாதவர் வழுத்தப் பொழிந்தருளி யென்றுமவர்
மன்னிவளர் சந்ததியிலோர்
மணிவிளக் கெனவளர் சிவஞான மாதவன்
மலர்ப்பதம் வணங்குவாமே.

—தொட்டிக்கலை - சுப்பிரமணிய முனிவர்

சீலநிகழ் மூலவாகமப் பொருளொன் றென்றாகித் திறம்பு றாது
ஞாலநிகழ் குலதெய்வ மெனப்பலருங் கொண்டாட நாங்க ளுய்யச்
சாலநிகழ் சமவாத முதலியபோ யொளித்திடவு தயமாய் வந்த
பாலநிகழ் விழிமறைத்த சிவஞான யோகிபதம் பணிந்து வாழ்வாம்.

—மீனாட்சிசுந்தரம் பிள்ளை

கலைதேர் நமச்சி வாயகுரு கருணைக் கடலிற் றிளைத்தாடிக்
கலகப் பாசத் தொடரறுத்துக் காமத் தறியை யறவீழ்த்தி
அலையுஞ் சமயத் தருக்கனைக்கி முடிவே ரோடு மகழ்ந்தெறிந்திட்
டருளின் படாத்தை முகமேற்கொண் டாதி வேதா கமங்களெனுந்
தொலையா மணிக ளிருமருங்குந் தொனிக்கச் சைவ மதம்பொழிந்து
துங்க மோடு முலகமுற்றுஞ் சுற்றும் வெற்றி வாரணமே
மலையா தருளு முனிவர்சிகா மணியே வருக வருகவே
வளமார் துறைசைச் சிவஞான வள்ளால் வருக வருகவே.

—பாண்டித்துரைத் தேவர்

---

## சந்தானசாரியர் திருநக்ஷத்திரம்

சித்திரை யத்த முமாபதி யாவணித் திங்கள்தனில்
உத்திரஞ் சீர்கொள் மறைஞான சம்பந்த ரோதுகன்னிச்
சுத்தமெய்ப் பூர மருணந்தி ஐப்பசிச் சோதிதன்னில்
வித்தக மெய்கண்ட தேவர் சிவகதி மேவினரே.

## சிவஞான சுவாமிகள் திருநக்ஷத்திரம்

மன்னும் விசுவா வசுவருட மேடமதி
யுன்னிரவி நாட்பகலோ தாயிலியம்—பன்னுந்
திருவாள னெங்கோன் சிவஞான தேவன்
திருமேனி நீங்குந் தினம்.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# உ ள் ளு றை

உ

சிவமயம்

# சிவஞானபோதச் சூர்ணிக்கொத்து*

## முதற் சூத்திரம்

௧.—சகம் பிறப்பிருப்பிறப்பாகிய முத்தொழிலையுடையது.

௨.—அது அரனாலே உடையது.

௩.—மற்றிருவரும் முத்தொழிற்படுவர்கள்.

## இரண்டாஞ் சூத்திரம்

௧.—அரன் உயிர்களின் இரண்டற நிற்பன்.

௨.—உயிர்களுக்குக் கன்மபலனை அரனே கொடுப்பன்.

௩.—உயிர்கள் அச்சு மாறியே பிறக்கும்.

௪.—அரன் சருவ வியாபகன்.

## மூன்றாஞ் சூத்திரம்

௧.—இல்லையென்கிற அறிவுடனே சொல்லுகையினாலே அறிவுயிர் உண்டு.

௨.—எனது உடல் என்று பொருட்பிறிதின்கிழமையாகச் சொல்லுகையினாலே, உடற்கு வேறாய் உயிர்உண்டு.

௩.—ஐந்தையும் ஒருவனே அறிதலின், ஒவ்வொன்றைமாத்திரம் அறிகிற ஐந்திற்கு வேறாய் உயிர் உண்டு.

௪.—கனவுடலை விட்டு நனவுடலிலே வருகையினாலே, அக்கனவுடற்கு வேறாய் உயிர் உண்டு.

---

*இதன் ஆசிரியர் பொல்லாப் பிள்ளையார் என்று பழைய வரலாறும், திருவாவடுதுறை சுவாமிநாத தேசிகர் என்று புதிய ஆராய்ச்சியும் கூறுகின்றன.

ரு.—நித்திரையிலும் பிராணவாயுத் தொழில் பண்ணவுஞ் சரீரத்துக்குப் புசிப்புந் தொழிலும் இல்லாதபடியினலே, பிராணவாயுவுக்கு வேருய் உயிர் உண்டு.

சு.—மறந்து மறந்து நினைக்கிறபடியினலே மறவாமல் இருக்கிற அரனுக்கு வேருய் உயிர் உண்டு.

எ.—எல்லாத் தத்துவங்களுக்கும் வேறு வேறு பெயர் இருக்கையினலே, அந்தந்தத் தத்துவங்களுக்கு வேருய் உயிர் உண்டு.

## நான்காஞ் சூத்திரம்

க.—அந்தக்கரணங்களுக்கு உயிர் உட்கூடினலன்றித் தொழில் இல்லாதபடியினலே, அந்தக்கரணங்களுக்கு வேருய் உயிர் உண்டு.

உ.—மலமறைப்பால் உயிருக்கு அறிவு இல்லை.

ங.—உயிர் மூன்றவத்தைப்படும்.

## ஐந்தாஞ் சூத்திரம்

க.—உயிராலே தத்துவங்களெல்லாந் தொழில் செய்யும்.

உ.—அரனலே உயிர்களெல்லாம் அறியும்.

## ஆருஞ் சூத்திரம்

க.—உயிரறிவினலே அறியப்பட்டதெல்லாம் அழியும்.

உ.—அப்பிரமேயமாக அறியப்பட்டவனே அரன்.

## ஏழாஞ் சூத்திரம்

க.—அரன் பாசத்தை அநுபவியான்.

உ.—பாசம் அரனை அநுபவியாது.

ங.—உயிர் அவ்வரனை அடையும்; அநுபவிக்கும்.

## எட்டாஞ் சூத்திரம்

க.—உயிருக்கு நல்லறிவு தவத்தினலேயே வரும்.

உ.—உயிருக்குச் சற்குருவாய் வருவது அரனே.

௩.—உயிர் பஞ்சேந்திரியங்களைப் பற்றுகையினாலே தன்னை யும் அறியமாட்டாது.

௪.—உயிர் பஞ்சேந்திரியங்களிலே பற்றற்றால் தன்னையும் அறியும்.

## ஒன்பதாஞ் சூத்திரம்

௧.—உயிர் அரன் ஞானத்தினாலேயே அரனைக் காணும்.

௨.—உயிர் பாசத்திலே பற்றற்றால், அரன் வெளிப்படுவன்.

௩.—பஞ்சாக்ஷரசெபம் பண்ணினால் வாசனாமலம் போம்.

## பத்தாஞ் சூத்திரம்

௧.—அரனுடன் ஒன்றாகி நில்.

௨.—உன்றொழிலெல்லாம் அரன் பணி யென்று கொள்.

## பதினோராஞ் சூத்திரம்

௧.—ஞானிக்கு வருகிற விடயங்களை அரனே அநுபவிப்பன்.

௨.—அரனை மறவாமல் அன்பு இருந்தால் அவனிடத்திலே ஐக்கியமாய்ப் போவன்.

## பன்னிரண்டாஞ் சூத்திரம்

௧.—மும்மலங்களையுங் களைக.

௨.—சிவஞானிகளுடனே கூடுக.

௩.—சிவஞானிகளையுஞ் சிவலிங்கத்தையுஞ் சிவனெனவே தேறி வழிபடுக.

௪.—வழிபடாமையை ஒழிக.

ஆக சூத்திரம் ௧௨ - க்குச் சூர்ணிக்கொத்து. ௩௯.



உ

சிவமயம்

# சிவஞான போதத்தைப்பற்றிய சில செய்யுள்கள்

## நூற்சிறப்பு

வேதம் பசுஅதன்பால் மெய்யா கமம்நால்வர்
ஓதும் தமிழ்அதனின் உள்ளுறுநெய்—போதமிகு
நெய்யின் உறுசுவையாம் நீள்வெண்ணெய் மெய்கண்டான்
செய்ததமிழ் நூலின் திறம்.

## சூத்திரக்கருத்து

முதற்பதி யானே யைந்து முன்னத்து விதமி ரண்டே
இதற்பினே யனுமா னத்தா லெண்ணிலா வுயிர்கண் மூன்றே
அதற்பினே யவத்தை நான்கே யகமறுத் திடலே யைந்தே
செகற்பதி பிரித்த லாறே தெரிவித்த லுயிரை யேழே.

மறைப்பினை நீக்கி ஞான வாரியை நினைத்த லெட்டே
சிறப்புடை யுபாயந் தம்மாற் றெளிவித்த லுயிரை யொன்பா
னறுத்திடன் மலங்கள் பத்தே யழுந்தலே சிவத்தி லொன்றே
திறப்பணி கொளலி ரண்டே சிவஞான போதஞ் சித்தி.

---

# சூத்திரத்தொகை முதலியன

சூத்திரமீ ராறினுக்குச் சூரணிமுப் பானென்பா
னேத்தவெண்பா வெண்பா னிரண்டனைத்துஞ்—சேர்த்ததொகை
நூற்றுமுப்பான் மூன்றிவற்றை நுண்ணுணர்வி னுய்ந்துணர்ந்தோர்
வேற்றுருக்கொள் ளாருறுவர் வீடு.

## அதிகரண வெண்பாத்தொகை

ஐயொருப தேழேழு மாங்கமைந்த நாலாறு
மையொன்ப தோரெட்டோ டாறாறுந்—துய்யவெட்டோ
டெண்பத்து மொன்றுஞ் சிவஞான போதத்தின்
மன்னருளும் வெண்பா வகை.

## அதிகரணத்தொகை

மூன்றுநான் கேழு மூன்றே முடிந்தபி னிரண்டி ரண்டே
மூன்றுநான் மூன்று நன்றாய் முடிந்தபி னிரண்டி ரண்டே
ஏன்றநான் கீறு தாமே யிவையீரா றிலகத் துள்ளே
ஏன்றமுப் பானென் பானே யெனக்கரு ளிரங்கி னானே.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# வடமொழிச் சிவஞானபோத மூலம்*

[illegible] |

[illegible] ||

[illegible] |

[illegible] ||

[illegible] |

[illegible]

[illegible] ||

[illegible] |

[illegible] ||

[illegible]

[illegible] |

[illegible] ||

---

* இது இரௌரவாகமத்துள் பாசவிமோசன படலத்திலிருப்பதாக ஆன்றோர் கூறுவர்.

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# சிவஞான பாடியம்*

## திருப்பாசுரம்

வாழ்க அந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனு மோங்குக
ஆழ்க தீயதெல் லாமர னாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே.

திருச்சிற்றம்பலம் திருச்சிற்றம்பலம் திருச்சிற்றம்பலம்

## திருவாசகம்

நமச்சிவாய வாஅழ்க நாதன்றாள் வாழ்க
இமைப்பொழுது மென்னெஞ்சி னீங்காதான் றாள்வாழ்க
கோகழி யாண்ட குருமணிதன் றாள்வாழ்க
ஆகம மாகிநின் றண்ணிப்பான் றாள்வாழ்க
ஏக னநேக னிறைவ னடிவாழ்க
வேகங் கெடுத்தாண்ட வேந்தனடி வெல்க
பிறப்பறுக்கும் பிஞ்ஞகன்றன் பெய்கழல்கள் வெல்க
புறத்தார்க்குச் சேயோன்றன் பூங்கழல்கள் வெல்க
கரங்குவிவா ருண்மகிழுங் கோன்கழல்கள் வெல்க
சிரங்குவிவா ரோங்குவிக்குஞ் சீரோன் கழல்வெல்க
ஈச னடிபோற்றி யெந்தை யடிபோற்றி
தேச னடிபோற்றி சிவன்சே வடிபோற்றி
நேயத்தே நின்ற நிமல னடிபோற்றி
மாயப் பிறப்பறுக்கு மன்ன னடிபோற்றி

---

*இவ்வணக்கச் செய்யுள்களை யெழுதியே சிவஞான சுவாமிகள் பாடியத்தைத் தொடங்கினார்களென ஆன்றோர் கூறுவர்.

சீரார் பெருந்துறைநந் தேவ னடிபோற்றி
ஆராத வின்ப மருளுமலை போற்றி
சிவனவனென் சிந்தையு ணின்ற வதனால்
அவனரு ளாலே யவன்றாள் வணங்கிச்
சிந்தை மகிழச் சிவபுரா ணந்தன்னை
முந்தை வினைமுழுது மோய வுரைப்பனியான்.

திருச்சிற்றம்பலம் திருச்சிற்றம்பலம் திருச்சிற்றம்பலம்

## திருக்குறள்

அகர முதல வெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு.

திருச்சிற்றம்பலம் திருச்சிற்றம்பலம் திருச்சிற்றம்பலம்

## கற்பக விநாயகர் துதி

பொற்பொது குடபாற் பொற்புற நடிக்குங்
கற்பகத் திருதாள் கற்பவர் நமரே.

திருச்சிற்றம்பலம் திருச்சிற்றம்பலம் திருச்சிற்றம்பலம்

## குருமரபு வாழ்த்து

கயிலாய பரம்பரையிற் சிவஞான
போதநெறி காட்டும் வெண்ணெய்ப்
பயில்வாய்மை மெய்கண்டான் சந்ததிக்கோர்
மெய்ஞ்ஞான பாநு வாகிக்
குயிலாரும் பொழிற்றிருவா வடுதுறைவாழ்
குருநமச்சி வாய தேவன்
சயிலாதி மரபுடையோன் திருமரபு
நீடூழி தழைக மாதோ.

திருச்சிற்றம்பலம் திருச்சிற்றம்பலம் திருச்சிற்றம்பலம்



உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# சிவஞானபாடியம்

## சிறப்புப் பாயிரம்

சைவாகமங்களின் உளவாகிய நாற்பாதங்களுள் வைத்து ஞானபாதத்தோதிய பொருளை ஆராயும் ஆராய்ச்சி இந்நூலின்கண் எடுத்துக்கொள்ளப்பட்டது. இவ்வாராய்ச்சிக்குப் பயன் யாதோவெனவும், இது கேட்டற்குரியார் யாவரெனவும், இதனால் நுதலப்படும்பொருள் யாதெனவும், இதனைப் பயப்பிக்குங் கருவியாய் இதற்குமுன் ஒருதலையான் உணர்தற்பாலது யாதெனவும், இதனை வழங்குதற்கிட்ட பெயர் யாதெனவும், இஃது யாண்டு வழங்குவதெனவும், இதன் முதனூல் யாதெனவும், இந்நூல் செய்தார் யாவரெனவுங் கேட்போர்க்குப் பலவாற்றான் ஆசங்கை நிகழுமன்றே; அவர்க்கு அவ்வாசங்கை நீங்கி மனவெழுச்சி சேறற்பொருட்டு இந்நூன்முகத் துரைக்கப்படுவதாகிய சிறப்புப்பாயிரம் :—

மலர்தலை யுலகின் மாயிருள் துமியப்
பலர்புகழ் ஞாயிறு படரி னல்லதைக்
காண்டல் செல்லாக் கண்போ லீண்டிய
பெரும்பெயர்க் கடவுளிற் கண்டுகேண் ணிருள்தீர்ந்
தருந்துயர்க் குரம்பையி னான்மா நாடி
மயர்வற நந்தி முனிகணத் தளித்த
உயர்சிவ ஞான போத முரைத்தோன்

பெண்ணைப் புனல்சூழ் வெண்ணெய்ச் சுவேதவனன்
பொய்கண் டகன்ற மெய்கண்ட தேவன்
பவநனி வன்பகை கடந்த
தவமுடி புனைந்த தலைமை யோனே எனவரும்.

இதன் பிண்டப்பொழிப்பு உரைத்துக்கொள்க. இப் பாயிரப்பொருள் நூலிறுதியின் 'எந்தைசனற்குமரன்' என்னும் வெண்பாவாற் பெறப்படுதலின் ஈண்டுங்கூறுதல் கூறியது கூறலாம் பிறவெனின்,—ஆகாது; எந்தை சனற் குமர னென்பதனாற் பெறப்பட்டதனையே மாணாக்கர்க்கு நான்முகத்து உணர்த்துதற்பொருட்டு ஈண்டுத் தந்துரைத்த தாகலானென்பது. மிருகேந்திரத் திறுதியிற்கூறும் வரலாற் றினை நாராயணகண்ட ஆசிரியர் நான்முகத்துத் தந்துரைத் ததூஉம் இக்கருத்தேபற்றியென்க. அல்லதூஉம், பொது வியல்பு சிறப்பியல்பென இருதிறப்படுத்து உணர்த்தியது இந்நூல் என்னும் பாகுபாடு ஆண்டுப் பெறப்படாமையின், அது கூறப்புகுந்தார் ஏனையவும் உடன்கூறினாரென்றலு மொன்று.

நிலவுலகமுழுதும் பரந்த விருளென அதன் பெருமை கூறுவார், மலர்தலையுலகின்மாயிருள் என்றார். மா-பெருமை. ஆகாரமுன்னும் யகரவுடம்படுமெய் சிறுபான்மை அருகிவரு தலை [1]"மாயிருஞாலம்" என்றாற்போலக் கொள்க. மாயாத விருளினிக்குதற்கு மாயிருளென்றாரென வினைத்தொகை யாக்கலுமொன்று. இவ்விருளென்னும் பொருளதியல்பும், இதன் றோற்றமும், கண்ணிந்திரியத்தி னியல்புரைப்புழிக்[2] காட்டுதும். ஒன்றோடொன்றொவ்வாத எல்லாச் சமயத்தாரா னும் புகழப்படுதலிற் பலர்புகழ்ஞாயிறு என்றார். முற் றும்மை விகாரத்தாற்றொக்கது.

ஏனை ஒளிகளான் மடங்காது யாண்டும் பரந்த புற விருளை ஒருபாலெழுந்த ஞாயிறு துமிப்பதுபோல, ஏனைச்

[1] அப்பர் தேவாரம்—4 - 56 - 1.

[2] இந்நூல் இரண்டாம் சூத்திரம்—உ-ம் அதிகரணம்.

சமயநூல்களான் மடங்காது யாங்கணும் நிறைந்த அகவிருளை ஓராகமத்தின் ஒருபடலத்தினெழுந்த பன்னிரு சூத்திரந் துமிக்குமென்பது குறிப்பான் விளக்குதற்குப் படரின் என்றார். அல்லதையென்பது, [1]"தன்மனைக் கிழத்தி யல்லதை பிறர்மனை - யன்னையிற்றிரா நன்ன ராண்மை" என்றாற்போல அன்றியென்னும் பொருள்படவந்த வினையெச்சக் குறிப்பு ஐயீற்றுடைக்குற்றுகரம். படரிற் காண்டல்செல்லுங் கண் எனற்பாலதனை எதிர்மறைமுகத்தாற் கூறினார், இன்றியமையாமை விளக்குதற்கு; "வாராமையில்லை" யென்றாற்போல் வனவுந் தேற்றப் பொருள்பயப்ப வந்தவாறு காண்க. இது வடமொழிமதம். இப்பொருள் விளங்குதற்பொருட்டுக் கண் மேல்வைத்துக் கூறினாரேனும், உவமேயப் பொருட்கேற்பக் கண் காண்டல்சேறற்குப் படர்ந்த ஞாயிறுபோல் என ஞாயிற்றின்மேல் வைத்துரைத்தல் கருத்தாகக் கொள்க.

இருட்கேட்டிற்கும் நிருவிகற்பஞ் சவிகற்பமென்னும் இருவகைக் காட்சிக்கும் ஞாயிறு இன்றியமையாச் சிறப்பிற்றாயவாறு போல, மலத்தீர்விற்கும் ஆராய்ச்சி அநுபூதியென்னும் இருவகை புணர்விற்கும் இன்றியமையாச் சிறப்பிற்றாயது இந்நூலென்பார், துமியப் படரினல்லதைக் காண்டல் செல்லாக் கண்போல் நாடித் தீர்ந்து கண்டு மயர்வற அளித்த சிவஞான போதம் என்றார். எனவே, புறவிருணீக்கிக் காட்டுதற்குப் பன்னிருவகைப் பட்ட ஞாயிறு போல, அகவிருணீக்கி புணர்த்துதற்குச் சூத்திரத்தாற் பன்னிருவகைப்பட்டது இந்நூலென்பதூஉமாயிற்று. இவ்வாறன்றி ஞாயிற்றைக் கடவுட்கு உவமையாக்குவாருமுளர். நூலுட் கூறியவதனைப் பாயிரத்துட் கூறவேண்டாமையானும், ஈண்டைக்காவதோர் பயன்றாராமையானும், அஃது உரையன்மையறிக.

பெரும்பெயர்க்கடவுள் என ஞேயமொன்றே பெரும் பெயர்க்குப் பொருளாகக் கூறினார்; ஏனையவற்றைத் தன்னுளடக்கி நிற்றலிற் றலைமைபற்றி யென்றுணர்க. பெரும்

[1]ஞானமிர்தம்—17. 39.

பெயரெனினும், மகாவாக்கியமெனினும், ஒருவார்த்தையெனினும் ஒக்கும். பெரும்பெயர்ப் பொருளே அஞ்செழுத்திற்குமாதலின், பெரும்பெயரோடு அஞ்செழுத்திடை வேற்றுமையின்மையுணர்க. ஈண்டிய பெரும் பெயர் - எல்லாநூற்பொருளுந் திரண்டு கூடிய பெரும்பெயரென்க. [1]"அருளாற்று மாரணமு மல்லாது மஞ்சின் - பொருளாற் றெரியப் புகின்" என்பதனானுமுணர்க. கண்ணிருள் வினைத்தொகை. புறவிருள்போலப் புலனாகாது கருதலளவையான் அறியப்படுவதென வேற்றுமை கூறுவார் கண்ணிருளென்றார். குரம்பையின் - இன் ஏதுப்பொருட்கண்வந்த ஐந்தாமுருபு. புக்கில்போலன்றென்பது உணர்த்துதற்கு அருந்துயர்க்குரம்பையெனப்பட்டது. அது, [2]"புக்கி லமைந்தின்று கொல்லோ வுடம்பினுட் - டுச்சி லிருந்த வுயிர்க்கு" என்பதனானும் அறிக.

தலைமைபற்றி அருந்துயர்க்குரம்பையி னென்றாரேனும், இனமாதல்பற்றிக் கரணம் புவனம் முதலாயினவும் உடன்கொள்ளப்படும்; படவே, உடம்பு முதலியவற்றான் ஆன்மாவை நாடுதலாவது, இவ்வுடம்பு சடமாகலின், இதன்கண் இன்பத்துன்பங்களை அறிந்து நுகர்தற்கு இதனின் வேறாய் ஆன்மாவென்றொரு பொருள் உண்டென்றும்; ஒருடம்பின் நிகழும் இன்பத்துன்பங்கள் மற்றோருடம்பின் அறியப்படாமையின், உடம்புதோறும் ஆன்மாக்கள் வெவ்வேறு உண்டென்றும்; அவை இவ்வுடம்பிற் கட்டுற்று நிற்றற்கு மூலமாய் ஒருபந்தம் அநாதியே யுடையவாதல் வேண்டுமென்றும்; வேண்டவே, மூன்றவத்தை யுளவாமென்றும்; நாடோறும் நனவும் கனவும் உறக்கமும் பேருறக்கமும் உயிர்ப்படங்குதலுங் காணப்படுதலான், உடம்பினும் ஐந்தவத்தைப் படுமென்றும்; புலன்களையுணரும் நனவிடத்து நினைப்பும் மறப்பும் முறையானே மாறிமாறி நிகழ்தலின் ஆண்டும் ஐந்தவத்தைப்படுமென்றும்; இவ்வான்மாக்கள் உடம்பிற் கட்டுண்டு தம்வயத்தனவன்றி நிற்றலின், இவற்றிற்கு உடம்பு முதலியவற்றைப் படைத்து நடாத்தி யொடுக்குதற்குப் பா

[1] திருவருட்பயன்—81. [2] திருக்குறள்—340.

மான்மா ஒருவன் உண்டென்றும்; அவன் இம்மூன்றனுள் ஓரோவொருதொழில் செய்யும் கடவுளர்க்கு மேலாய் இவர் களையுந் தொழிற்படுத்தி நிற்பனென்றும்; அவன் உலகத் தைப் படைக்குங்கால் விகாரமின்றி யுடனாய்நின்று தனது சமவேதசத்தியான் இருவினைகட்கேற்ப மாயையென்றொரு சடசத்தியினின்றும் தோற்றுவித் தொடுக்குவனென்றும்; இதனானே அவனும் இலயம் போகம் அதிகாரமென்னும் மூன்றவத்தை யுடையனென்றும்; அஃது அவனுக்கு உப சாரமேயென்றும்; அவன் அமலனாய் நின்றே இவ்வான்மாக் களுக்கு இன்பத்துன்பங்களைக் கருவிகளின்வழியான் நுகர் விப்பனென்றும்; அவன் அழிபொருள்போலச் சுட்டியறியப் படுவானுமன்றிப், பொய்ப்பொருள்போல அறியப்படாத வனுமன்றி, வேறுயறியப்படுவனென்றும்; அங்ஙனம் அறி கின்றவன் ஆன்மாவென்றும் ஆகமவளவை சார்பாகத் தலை நின்று வழியளவையான் ஆராய்ந்து பொதுவியல்பு துணிதல். வழியளவையெனினும், கருதலளவையெனினும், அநுமான மெனினும் ஒக்கும். ஆன்மாவென்பது பொதுச்சொல்லாக லிற், பரமான்மாவுங் கொள்ளப்பட்டது.

இனிப், பெரும்பெயர்க் கடவுளிற் காண்டலாவது, அங்ங னந் தன்னையுந் தலைவனையும் பொதுவிலக்கணத்தானுணர்ந்து மலநீங்கிய பின்னர்ப், பெரும்பெயர்ப்பொருளே சிறந்தெடுத் தோதும் ஆகமவளவை சார்பாகத்தலைநின்று, அழுந்தியறி தலை அநுபவித்த லென்னுஞ் சொற்குப் பொருளாகலின் அவ்வநுபவ மெனப்படுவது மேற்பொதுவியல்பாற் பெறப் பட்ட முப்பொருள்களுள் அழுந்தாது நின்றறியும் பரமான் மாவுக்கும் அறிவில்லாத சடமாகிய பாசத்திற்குங் கூடாமை யின் அவ்விரண்டின் வேறாய்ச் சர்வஞ்ஞானோத்தரத்தினோதி யவாறு தன்னாற் பற்றப்பட்டபொருளின் அதுவதுவேயாக அழுந்துமியல்புடைய ஆன்மாவே அவ்விரண்டினையும் அநுப விக்கு மென்றும்; எனவே, மாசுநீங்கியவழி ஆடையின் குணமாகிய வெண்மை ஆடைமுழுதினும் விளங்கினாற்போல, மலநீங்கியவழித் தன்வியாபகமுற்றும் விரிந்துவிளங்கு மியல் புடைமை மாத்திரையேபற்றி முன்விளங்கிய ஏகதேச

குற்றமும், செய்தல் கடமையாமாறும் உணர்த்தி அதனை வலியுறுத்துதற் கெடுத்துக் காட்டும் உதாரணம் :—

தன்னை யறிவித்துத் தான்றனுச் செய்தானைப்
பின்னை மறத்தல் பிழையலது—முன்னவனே
தானேதா னுச்செய்துந் தைவமென்றுந் தைவமே
மானே தொழுகை வலி எனவரும்.

தன்னுண்மை யறியமாட்டாது குருடாய்க் கிடந்த உயிர்க்குப் பலவாற்றானும் அதனைத் தெரித்துணர்த்தி எத்தனையு மெளிய அவ்வுயிரை எத்தனையுமரிய தானும் வண்ணஞ் செய்தளித்த பெரியதோ ருதவியை அதன் பின்னர் மறக்குமாயின், அஃதிதற்குமுன் அறியாமையான் மறந்த குற்றம் போலத் தீர்திறனுடையதொரு குற்றமன் றாகலானும், முதல்வன் அங்ஙனந் தான்றனேயாகச் செய்தாலும் இதுகாறுந் தனக்குச் சுதந்திரமின்றி முதல்வனது உபகாரத்தை யின்றியமையாதாய் அடிமையாகிய உயிர் எக்காலத்தும் அவ்வாறடிமையேயா மாகலானுந் தான்றனுச் செய்தளித்த அப்பெரியோனை வழிபடுதலே அவ்வுயிர்க்கு வலியாவ தென்க.

தமதுமுதறனே குருவாகலின், தான்றனுச் செய்தானை என்றும், முன்னைமறந்த குற்றம் அறியாதுநிகழ்ந்த தாகலிற் கழுவப்படும், இஃது அதுபோற் கழுவப்படுவதன்றென்பார், பின்னை மறத்தல் பிழையலது என்றுங் கூறினார். பின்னை மறத்தல் என்பதனால் முன்னை மறத்தல் பெறப்பட்டது. [1]"எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டா முய்வில்லை - செய்ந் நன்றி கொன்ற மகற்கு" என்னுங் கருத்து நோக்கிக் கூறிய தூஉமாம். அலதும் எனப் பாடமோதி இது பிழையாத லன்றியும் என்றுரைப்பாரு முளர்.

ஏகாரம் முன்னையது அசைநிலை ; பின்னையன தேற்றம். செய்தாலென்பது செய்து எனத் திரிந்தது. உம்மை சிறப்பின்கண் வந்தது.

தான்றனுச் செய்தல் - எதனை யெதனைப் பற்றினும் அதுவதுவாமுயிர் தன்னை அறிந்தவழி எண்குணங்களா

[1] திருக்குறள்—110.

னிறைந்த தன் வண்ணமாகச் செய்தல். அங்ஙனஞ் செய்த வழியும் [1]"உயிர்தானுஞ் சிவாநுபவ மொன்றினுக்கே யுரித்" தென்பார், தைவ மென்றுந் தைவமே என்றார். தைவம் என்னுஞ் சொல்லியல்பு [2]மேலேயுரைத்தாம்.

மானே என்னும் இரண்டனுருபு விகாரத்தாற் றொக்கது; மான் என்பது வடசொற்றிரிபு. சுட்டு வருவிக்க. வலிதருவதனை வலி என்று உபசரித்தார்.

இவ்வுதாரணங்கள் மூன்றனும் வழிபாட்டிற்கு இடத்து நிகழ் பொருண் மாத்திரையே யன்றி இடவிசேடமும் பெறல் வேண்டுமென அதனை வலியுறுத்து முகத்தான் முறையே சிவலிங்கத்தையுஞ் சிவபத்தர் திருவேடத்தையுஞ், சிவதேசிகனையும் அறிந்து வழிபடுமாறு கூறப்பட்டது.

இங்ஙனஞ் சிவாகமத்துள்ள ஞானபாதப் பொருளெல்லாவற்றையும் பொது உண்மை என்று இருவகைப் படுத்துப், பிரமாணவியல் இலக்கணவியல் சாதனவியல் பயனியல் என நான்கியலாக வைத்துப் போதிப்பதாகிய இச்சிவ ஞானபோத நூலைக் கோடற்குரிய அதிகாரிகளாவார் இவரென்பது உணர்த்துதற் கெழுந்தது வருஞ்செய்யுளென்பது:-

சிவமென்னு மந்ததர சிந்தைநேர் நோக்கப்
பவமின்றுங் கண்வா சகத்திற்—சிவமுண்டாம்
ஒன்று மிரண்டு மலத்தார்க்கிங் கோண்குருவால்
இன்றிந்நூன் மும்மை மலர்க்கு எனவரும்.

தான்றனுச் செய்த வாற்றாற் சீவனென்னும் பெயரினீங்கிச் சிவம் என்று ஓதப்படும் வேதாந்தத் தெளிவாகிய சித்தாந்தத்தையுடைய மாணவகனே, ஒன்று மிரண்டுமாய மலங்களையுடைய விஞ்ஞானகலர்க்கும் பிரளயாகலர்க்கும் முறையே அறிவின்கணின்று அருட்பார்வையா னேக்குதலானும், தேவகுருவாய் முன்னின்று செய்யுந் திருநோக்கம் பரிசம் வாக்கு எனப்படுந் தீக்கையானும் பிறவிக் கேதுவாய பசுத்துவம் நீங்கிச் சிவத்துவம் விளங்கு மாகலான், அவரின்

[1]சிவஞானசித்தி, சுபக்கம்—௩௧௧. [2]இந்நூல் பக்கம்—ருசுக.

வேருகிய மும்மலமுடையார்க்கே உரித்து இவ்வுலகத்து அநுபவமுடைய தேசிகராற் போதிக்கப்படும் இச் சிவஞான போத நூல் என்க.

அந்தம் வேதாந்தம்; அந்ததராஞ் சித்தாந்தம்; ஆகலின், அதனைப் பெற்றோரது பெருமை கூறுவார், சிவமென்னும் அந்ததர என்றார். என்னும் என்புழிப் படுசொற் றொக்கது. சிந்தை - அறிவு. கண்ணுருபு விரித்துரைக்க. நேர்நோக்குதல்- முன்னை மருட்பார்வையை மாற்றி அருட்பார்வையா னோக்குதல். நோக்க - நோக்குதலானென்க. கண் வாசகங்களைக் கூறவே இனம்பற்றிப் பரிசமும் உடன் கொள்ளப்படும். பவம் - ஆகுபெயர். இந்நூல் அநுபவமுடைய தேசிகனலன்றி விளங்கா தென்பார், ஒண் குருவால் என்றார். போதிக்கப்படும் என்பது அவாய்நிலையான் வந்தது. இன்றிந்நூல் என்பது இந்நூ லென்னும் பொருட்டு. இக்காலத்துரைக்கப்பட்ட நூலெனினு மமையும்; அது, 'தானுரைத்தான்........இன்று' என வருகின்ற வெண்பாவிற் கூறியவாற்றானு மறிக. மும்மை என்றது ஈண்டு எண்ணின்கணின்றது; [1] "தெரிமாண் டமிழ் மும்மைத் தென்னம் பொருப்பன்" என்புழிப்போல.

---

## சிறப்புப் பாயிரம்

*எந்தை சனற்குமர னேத்தித் தொழவியல்பாய்
நந்தி யுரைத்தருளு ஞானநூல்—சிந்தைசெய்து
தானுரைத்தான் மெய்கண்டான் றாரணியோர் தாமுணர
ஏதுதிருட் டாந்தத்தா லின்று.

---

சிவஞானபோதத்திற்கு மாதவச்சிவஞானயோகிக ளருளிச்செய்த
**சிவஞானபாடியம் முற்றுப்பெற்றது.**

---

[1] பரிபாடல்.   * இது பிற்காலத்தான்றோராற் செய்யப்பட்டது.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# பாட்டு முதற்குறிப்பகராதி

